# கல்கி



KALKI டிசம்பர் 11, 1955

4 அணா



மலர் 15
இதழ் 19

கல்கி

மன்மத ௵
கார்த்திகை 25

டிசம்பர் 11 1955



# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# ஜம்மியின் லிவர்க்யூர்

குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டிகளுக்கு



○●○

நோயாளிகளின் சௌகரியத்தை முன்னிட்டு எமது டாக்டர் மேற்குறித்த ஊர்களுக்கு அதனதன் எதிரே குறித்த தேதிகளில் பிரதி மாதமும் விஜயம் செய்வதால் அவரிடம் ஆலோசனை பெறலாம்.

ஆலோசனை நேரம் :

காலை 9 - லிருந்து 11 மணி வரை ; மாலை 3 - லிருந்து 5 மணி வரை

| இடம் | தேதி | |
|---|---|---|
| கரூர் | 1 | காலை 10 - 12 |
| சேலம் | 2 | காலை & மாலை |
| ஈரோடு | 3 | காலை 10 - 12 |
| திருப்பூர் | 3 | மாலை |
| கோயமுத்தூர் | 4 | காலை & மாலை |
| பாலக்காடு | 5 | காலை |
| திண்டுக்கல் | 6 | காலை |
| பெரியகுளம் | 6 | மாலை |
| மதுரை | 7 & 8 | காலை & மாலை |
| கோயில்பட்டி | 9 | காலை 10 - 12 |
| தூத்துக்குடி | 9 | மாலை |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 10 | காலை & மாலை |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 11 | காலை |
| ஸ்ரீவைகுண்டம் | 11 | மாலை |
| அம்பாசமுத்திரம் | 12 | காலை |
| தென்காசி | 12 | மாலை |
| திருவனந்தபுரம் | 13 | காலை & மாலை |
| ராஜபாளையம் | 14 | காலை |
| சிவகங்கை | 14 | மாலை 4 – 5 |
| காரைக்குடி | 15 | காலை & மாலை |
| தேவகோட்டை | 16 | காலை |
| புதுக்கோட்டை | 16 | மாலை |
| தஞ்சாவூர் | 17 | காலை & மாலை |
| பட்டுக்கோட்டை | 18 | காலை |
| திருத்துறைபூண்டி | 18 | மாலை |
| மன்னார்குடி | 19 | காலை & மாலை |
| திருவாரூர் | 20 | காலை & மாலை |
| நாகப்பட்டினம் | 21 | காலை |
| நன்னிலம் | 21 | மாலை |
| மாயூரம் டவுன் | 22 | காலை & மாலை |
| சீர்காழி | 23 | காலை |
| சிதம்பரம் | 24 | காலை & மாலை |
| கடலூர் | 25 | காலை & மாலை |
| விழுப்புரம் | 26 | காலை & மாலை |
| விருத்தாசலம் | 27 | மாலை |
| காஞ்சிபுரம் | 28 | காலை & மாலை |
| வேலூர் | 29 | காலை & மாலை |

ஆலோசனை இடங்கள் வழக்கப்படியே

○●○

விவரங்களுக்கு எழுதவும் :

## ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை–4 ★ (தெப்பக்குளம்) திருச்சிராப்பள்ளி ★ (பெரிய தெரு) கும்பகோணம்



மலர் 16 இதழ் 19

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ௵ கார்த்திகை 25

# அணுகுண்டு ஒழிப்பு

அணுகுண்டு சம்பந்தமாக எல்லாக் குற்றத்தையும் ராஜாஜி அமெரிக்காவின் மேல் சுமத்துகிறாரே, ஏன் அவர் இப்படி ஸோவியத் தேசத்தாருக்குப் பட்சபாதமாக இருக்கிறார் என்று சிலர் திகைக்கிறார்கள்.

அமெரிக்க அரசாங்கத்தாருடைய பேச்சுக்களையும் காரியங்களையும் தினந் தோறும் பத்திரிகைகளில் படித்து வருகிறோம். நிலைமையை நன்றாக ஆராய்ந்து பார்த்தால் அடியிற் கண்ட ஐந்து உண்மைகள் வெளிப்படையாகும்.

1. பிசாச குண்டுகளை முதலில் உண்டாக்கியது அமெரிக்கா. மற்றவர்கள் பிறகுதான் ஆரம்பித்தார்கள். முதலில் இந்தக் குண்டுகளை உபயோகித்ததும் அமெரிக்கர்கள்தான்.

2. இரு பட்சத்திலும் சம்மதித்த பிறகுதான் அணுகுண்டை நிறுத்த முடியும் என்று இரு கட்சிகளுமே வாதாடுகிறார்கள்.

3. வல்லரசுகள் அனைத்தும் ஏகோபித்து ஒப்புக்கொண்டு பிசாச குண்டுகளை ஒழித்துவிட வேண்டும் என்று ருஷிய சர்க்கார் பிரேரேபித்துக் கொண்டேயிருக்கிறார்கள். அமெரிக்கர் இந்தப் பிரேரணையை ஒப்புக்கொள்ள மாட்டோம் என்கிறார்கள்.

4. "அணுகுண்டு ஒழிப்பை அமுலுக்குக் கொண்டு வருவதற்காக அமைக்க வேண்டிய மேற்பார்வை முதலிய ஏற்பாடுகளுக்கு எங்கள் சம்பந்தப்பட்டவரை எவ்விதத் தடையும் இல்லை, ஒப்புக் கொள்ளுகிறோம்" என்று ருஷ்ய சர்க்கார் வியக்தமாகச் சொல்லி விட்டிருக்கிறார்கள்.

5. "ஒப்புக் கொண்டாலும், எதிர்க் கட்சியில் மோசம் செய்து விடுவார்கள். நம்ப முடியாது. ஆகையினால் நாங்கள் ஒப்புக்கொள்ள முடியாது" என்று ருஷ்ய சர்க்கார் சொல்லவில்லை. அமெரிக்க சர்க்கார்தான் இப்படிச் சொல்லிக்கொண்டே தாமதித்து வருகிறார்கள். அமெரிக்கர் கொடுக்கும் வாக்குறுதியை ருஷ்யர் நம்பத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் ருஷ்யரின் வாக்குறுதியை அமெரிக்கர் ஒப்புக் கொள்ள முடியாது என்கிறார்கள்.

ஐந்தாவதாகச் சொல்லப்பட்ட விஷயம் மிக முக்கியமானதும் நுட்பமானதுமான அம்சம்.

அமெரிக்கருக்கு உபதேசம் செய்வதுபோல் ஏன் ருஷ்யருக்கு உபதேசம் செய்யவில்லை என்று ஒரு குதர்க்கம் உண்டு. பகிரங்கமாகச் சொல்லும் பேச்சுக்களும் எழுதப்படும் அறிக்கைகளும் உலகம் முழுவதுக்குமே பொதுவாகச் சொல்லப் பட்டவையேதான்.

மேலே குறிக்கப்பட்ட ஐந்து உண்மைகளையும் நினைவில் வைத்துக் கொண்டோமானால் ருஷ்ய சர்க்காருக்குச் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை என்பது தெளிவாகும். சொல்ல வேண்டியது அமெரிக்க அரசாங்கத்தாருக்கும், பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்குமே.

சமீபத்தில் நவம்பர் 28-ந் தேதி வெளியிட்ட செய்திகளில் ருஷ்ய அரசாங்கத்தார் அணுகுண்டு ஒழிப்புக்குத் தாங்கள் தயார் என்று மறுபடியும் உறுதி கூறியிருக்கிறார்கள். அமெரிக்கத் தலைவர் டல்லெஸ் தாம் தயாரில்லை என்று மறுபடியும் சொல்லி யிருக்கிறார்.

இதற்குமேல் விளக்கம் ஏதும் அவசியமில்லை அல்லவா ?

# புயலும் மழையும்

"ஈசன் ஒருவன் இருக்கிறான், அவனுடைய சக்தி அனைத்தையும் ஆட்டிச் சுழற்றி வருகிறது" என்று நினைவூட்டவே பெரும் விபத்துக்கள் கொஞ்சமும் எதிர்பாராதபடி திடீர் என்று வந்து நம்மைத் தாக்குகின்றன. பிறகு அந்த விபத்தையும் சமாளித்துப் புத்துயிர் பெற்று அடக்கத்துடன் பயபக்தியுடன் வாழ்க்கை நடத்த அவனிடமிருந்து சக்தியும் பெற்று வருகிறோம். இதைப் பல தடவை எல்லா நாடுகளிலும் உலக மக்கள் பார்த்தும் அனுபவித்தும் வந்திருக்கிறார்கள்.

கடலையடுத்துள்ள தென் ஜில்லாக்கள், முக்கியமாக, தஞ்சை ஜில்லாவில் மக்கள் கோர விபத்துக்கு ஆளாய் விட்டார்கள். பெரும் நஷ்டமும் சேதமும் அடைந்து அலைகிறார்கள். உயிர்ச் சேதமும் பொறுத்துக் கொள்ளலாம், உயிரை வைத்துக் கொண்டு இருக்க இடமும் உண்ண உணவும், படுக்கக் கூரையும் இல்லாமல் பெண்களும் குழந்தைகளும் அலைகிறார்கள்.

நாம் அனைவரும் ஒரு குடும்பம் என்பதை மறக்காமல் ஒருவருக்கொருவர் ஓடி உதவி செய்து ஆண்டவன் கருணையை நாடவேண்டும். உயிரெல்லாம் ஒன்று, அனைத்தும் ஒரு உயிர், ஒரு லோகம் என்ற பேருண்மையை யறிந்து விட்டோமானால் எந்த விபத்தையும் சமாளித்துக் கொள்ளலாம்.

சர்க்கார் தூங்க மாட்டார்கள். பொறுப்பேற்றுக் கொண்டவர்களின் கவலையானது விபத்தினால் கஷ்டப்படுபவர்களின் துயரத்துக்குக் குறைந்திராது. இன்னது செய்ய வேண்டும், இன்னது செய்ய முடியும் என்று துரிதமாக யோசித்துச் செய்வார்கள். அவர்களுக்கு மக்கள் அனைவரும் துணை நிற்க வேண்டும். எந்த சமயத்திலும் மோசம் பித்தலாட்டம் செய்யும் சுபாவம்கொண்டவர்களும், சுயநலமே வாழ்க்கையின் நோக்கமாக வைத்துக் கொண்டிருப்பவர்களும் இப்போது அதையெல்லாம் மறந்து உதவி செய்ய முன்வரவேண்டும்.

தைரியத்தை இழந்து விடக்கூடாது. தீரர்களாக இந்தத் துன்பக் கடலையும் கடப்போமென்று உறுதி கொண்டு முயல வேண்டும்.

வேதாரண்யத்தில் நம்முடைய வேதரத்தினம் அவர்கள் நடத்தி வந்த அனாதை ஆசிரமமும் அங்கே காப்பாற்றப்பட்டு வந்த குழந்தைகளும் என்னவானார்கள், எந்த நிலையில் இருக்கிறார்கள், என்ன கஷ்டப்படுகிறார்கள் என்பது ஒன்றும் தெரியவில்லை. அதைப் போல் இன்னும் பல்லாயிரம் ஏழைக் குடும்பங்கள் என்ன கதி யடைந்திருக்கிறார்களோ, முழு விவரமும் இன்னும் சரியாகத் தெரியவில்லை.

இந்தச் சமயத்தில் நாம் வாழ்வது பிறருக்கு உதவி செய்யவே என்கிற உண்மையை உணர்ந்து நடந்து கொள்ள வேண்டும்.

# கோவாப் பிரச்னை

பாரத நாட்டுக்கு விஜயம் செய்த ருஷ்யத் தலைவர்கள் சென்னையில் நிகழ்ந்த மாபெரும் கூட்டத்தில் பேசியபோது கோவாப் பிரச்னையைப் பற்றிக் குறிப்பிட்டனர். நியாயமாக இந்தியாவுக்குச் சொந்தமான கோவாவிலிருந்து வெளியேறப் போர்ச்சுகல் விரும்பாதது மிகவும் கண்டிக்கத் தக்கதென்றும், போர்ச்சுகலின் ஆதிக்கத்திலிருந்து கோவா விடுதலை பெற்று பாரதக் குடியரசுடன் ஐக்கியம் அடைவது நிச்சயம் என்றும் ஸ்ரீ குருஷ்சேவ் கூறினர்.

ஒரு நாட்டில் மற்றொரு நாட்டினர் ஆதிக்கம் செலுத்தும் காலனி முறை அடியோடு ஒழிய வேண்டும் என்பதுதான் ஐக்கிய நாடுகள் உலகமகா சபையின் முக்கிய விதிகளில் ஒன்று. அந்த விதிக்கு இணங்க பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ் முதலிய வல்லரசுகள் தங்கள் ஆதிக்கத்திலிருந்த பல காலனிகளையும் விட்டு வெளியேறி விட்டன. காலனி ஆட்சி முறை நீடிப்பது உலக அமைதிக்கே குந்தகம் விளைப்பதாகும் என்ற அபிப்பிராயம் நாளுக்கு நாள் பலமடைந்து வருகிறது. அப்படி யிருந்தும் கூட, ஸ்ரீ குருஷ்சேவ் கூறிய விஷயம் அமெரிக்காவில் எதிர்ப்பை உண்டுபண்ணி யிருப்பது ஆச்சரியமாக இருக்கிறது.

தற்போது அமெரிக்காவுக்கு விஜயம் செய்திருக்கும் போர்ச்சுகல் மந்திரி டாக்டர் குன்ஹா, போர்ச்சுகலுக்குக் கோவாவிலிருந்து வெளியேறும் உத்தேசம் இல்லை யென்றும், மற்ற மேற்கு நாடுகளும் போர்ச்சுகலைப் போலவே தங்கள் காலனிகளை விட்டு விடாமல் உறுதியாக நிற்க வேண்டும் என்றும் கூறியிருக்கிறார். அமெரிக்க உள்நாட்டு மந்திரி டல்லஸும், டாக்டர் குன்ஹாவும் கையெழுத்திட்டு வெளியிட்டுள்ள கூட்டறிக்கையில், அமெரிக்கா மேற்படி போர்ச்சுகல் மந்திரியின் கருத்துக்கு ஒத்துப் பாடியிருக்கிறது!

கோவாவைப் போல் அமெரிக்கா ஒரு காலத்தில் பிரிட்டிஷ் மாகாணங்களில் ஒன்றாகத்தான் இருந்து வந்தது. அந்த வெட்கக்கேடான நிலையிலிருந்து விடுதலை பெறுவதற்கு அமெரிக்கா நடத்திய சுதந்திரப் போராட்டம் சரித்திரப் புகழ் வாய்ந்தது. அமெரிக்கா பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவதற்குப் போராடியதைப் போலவே இன்று கோவா மக்கள் போர்ச்சுகலின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறப் போராடி வருகிறார்கள். இந்த உண்மையை அறிந்தும் அமெரிக்கா தன் சரித்திரத்தை மறந்து, கண்மூடித்தனமாகப் போர்ச்சுகலுக்குப் பரிந்து பேச முன்வந்திருப்பது ஜனநாயக தர்மத்துக்கே முரணாகும்.

இந்நிலையில், கோவாவில் போர்ச்சுகல் ஆட்சியைக் கண்டித்துப் பேசிய ருஷ்யத் தலைவர்களின் வார்த்தைகளைக் கேட்டுப் பாரத நாடு மகத்தான சந்தோஷம் அடைந்ததில் ஆச்சரியம் என்ன இருக்கிறது!

* * *

பாரத மக்களின் அன்புக் காணிக்கையான மலர் மாலைகளுடன் ருஷ்யத் தலைவர்கள் நிற்பதையும், பாரதத் தவப் புதல்வரான நேருஜி அகமும் முகமும் மலர அவர்களை வரவேற்பதையும், அந்தக் காட்சியை ஸ்ரீமதி இந்திரா காந்தி புன்முறுவலுடன் பார்த்துக் கொண்டிருப்பதையும், இந்தியா-ருஷ்யா நட்புக்கு அறிகுறியாகப் பாரதத் தாயின் மணிக் கொடியும் ருஷ்யக் கொடியும் ஒளி வீசிப் பறப்பதையும் இந்த வாரக் "கல்கி" இதழ் அட்டைப் படம் சித்திரிக்கிறது.

புது ஏற்பாடும் பனிப் பெட்டியும்



# என்ன சேதி?

## பல்லாண்டு

நம் ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் அவர்களின் 71வது பிறந்த தின விழா சென்ற சனிக்கிழமை 3-12-55 அன்று டில்லி ராஜபவனத்தில் வெகு விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. நமது பிரதமர் நேரு அன்று காலை ஜனாதிபதியைப் பேட்டி கண்டு தமது வாழ்த்துக்களைத் தெரிவித்தார். உப ஜனாதிபதி, மற்றுமுள்ள மந்திரிகள், பல சங்கங்களைச் சேர்ந்தவர்கள் ஜனாதிபதியைப் பேட்டி கண்டு மகிழ்ந்தார்கள். வாழ்த்துக்களும் தந்திகளும் ஜனாதிபதிக்கு ஏராளமாக வந்து குவிந்தன.

காந்தி மகானின் சாந்த வழியைப் பின்பற்றி, காந்தி பிறந்த நாடு என்று தாய் நாட்டு மக்களுக்கும் பிறநாட்டுத் தூதுவர்களுக்கும் விருந்தினர்களுக்கும் சதா ஞாபகப் படுத்தி வரும் நமது ஜனாதிபதி ராஜன் பாபு அவர்கள் நீடூழி வாழ வேண்டும் என்று பாரத மக்களுடன் சேர்ந்து இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

## புதிய ஏற்பாடும் அகஸ்தியரும்

தெற்கே ஒரு பெரிய ராஜ்யமாக அமைந்தால் ஒழிய, சென்னைக்கு இது வரையில் இருந்த செல்வாக்கு நிலைக்காது என்கிற உண்மையை இன்னும் தமிழர்கள் உணரவில்லை போல் தோன்றுகிறது. இதைப் பற்றித்தான் ராஜாஜி கவலைப் படுகிறார். மேல் வட்டாரங்களில் இம் மாதிரித் தெற்கே ஒரு பெரிய ராஜ்யத்தை அமைப்பதற்கு ஆட்சேபனை இல்லை என்று தெரிய வருகிறது. நம்மவர்கள்தான் தடையாக நின்றதாகச் செய்தி. சில்லறை உத்தியோகங்களுக்கு ஆசைப்பட்டு இவ்விதம் தடை சொல்லுவதாகத் தோன்றுகிறது. இந்த உத்தியோகங்களுடைய போக்கு பின்னால்தான் புரியும். செல்வாக்கு குறையக் குறைய நிர்வாகம் மேலகத்துக்குத்தான் போய்ச் சேரும் என்பதை நம்மவர் அறியவில்லை. பார்வதி விவாகத்தில் வடக்குத் தட்டுத் தாழ்ந்த காலத்தில் தெற்கே அகஸ்தியர் நின்றார். இப்போது அவர் எங்கே?

## ஜில்லாவாரி நிர்வாகம்

நவம்பர் 28-ந் தேதி புது ஏற்பாட்டைப் பற்றி ராஜாஜி தம்முடைய அபிப்பிராயத்தை வெளியிடுவதற்கு முந்தியே, புகழ்பெற்ற பழைய பம்பாய் காங்கிரஸ் பிரமுகர் டி. டி. லாட்டாயே அவர்கள் தமது அபிப்பிராயத்தை அச்சடித்து வெளியிட்டிருக்கிறார்.

1915 முதல் 1920 வரையில் பம்பாய் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசியாக இருந்த லாட்டாயே தமது அறிக்கையை டாக்டர் ராஜேந்திர பிரசாத், ஜவாஹர்லால் நேரு, கோவிந்த வல்லப பந்த், ராஜாஜி முதலியவர்களுக்கும் அனுப்பி யிருக்கிறார்.

பாரத நாட்டை பாஷாவாரி மாகாணங்களாகவோ அல்லது வேறு விதமாகவோ பிரிப்பதற்குப் பதிலாக, ஜில்லாவாரியாக வைத்து மத்திய அரசாங்கமே நிர்வாகம் செய்ய வேண்டும் என்று ராஜாஜி சொன்ன விதமே அவரும் சொல்லியிருக்கிறார். இந்த முறையில் எந்த விதமான ஏற்றத் தாழ்வும் இல்லாமல் நிர்வாகம் நடைபெற வழி ஏற்படும்.

## தெய்வக் குரல்

ராஜ்ய புது ஏற்பாட்டுக் கமிட்டியின் யோசனைகளைப் பற்றி ராஜாஜி தமது அபிப்பிராயத்தைத் தில்லியிலிருக்கும் போது தெரிவித்தார். அதைப் பற்றி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் பொதுக் காரியதரிசி திரு மாதவன் நாயர் தமது கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

" ராஜ்ய புது ஏற்பாட்டை இன்னும் பதினைந்து ஆண்டுகளுக்குப் பனிப் பெட்டியில் பூட்டி வைக்க வேண்டும் என்று ராஜாஜி கூறி யிருக்கிறார். இது காலந் தாழ்ந்த யோசனை. எனினும், அவர் கூறுவதில் எவ்வளவோ பொருள் இருக்கிறது " என்று கூறுகிறார்.

தவறு ஒன்று செய்து விட்டாலும் அதைத் திருத்துவதற்குக் கூட அது ஆறாக வெள்ளம் எடுத்து ஓடும்வரை காத்திருக்க வேண்டியதில்லை அல்லவா?

பாலக்காட்டு ஜில்லா காங்கிரஸ் கமிட்டியினர், ராஜ்ய புது ஏற்பாட்டுக் கமிட்டியின் சிபாரிசுகளைப் பற்றி ராஜாஜி கூறிய யோசனையை முழுமனதுடன் நவம்பர் 28-ம் தேதி கூட்டம் நடத்தி ஒரு தீர்மானம் நிறைவேற்றி வரவேற்றிருக்கின்றனர்.

" "ராஜ்ய புது ஏற்பாட்டுக் கமிட்டியின் சிபாரிசுகளை இன்னும் பதினைந்து ஆண்டுகளுக்கு ஒத்தி வைக்க முடியவில்லை எனில்,

அதற்கு மாற்று யோசனையாக, மத்திய சர்க்கார் இந்தியா முழுதும் ஒரே ராஜ்யமாக, ஜில்லா அதிகாரிகள், ஜில்லா போர்டுகள் இவற்றுடன் பிராந்திய கமிஷனர்களையும் நியமித்து ராஜ்யத்தை நடத்த வேண்டியது' என்று பொருள்பட ராஜாஜி வெளியிட்ட அறிக்கையை இந்தக் கூட்டம் முழு மனதுடன் வரவேற்கிறது.''

இந்தச் சூழ்நிலையில் புது ஏற்பாட்டுக்கு மக்கள் சபையில் போதிய 'கோரம்' இன்மையால் ஒரு அப்யந்தரம் ஏற்பட்டது. இந்தத் தடை தெய்விகச் செயலாகவே இருக்கலாம். ''அவசரப்பட வேண்டாம்'' என்று அசரீரி சொன்னதாகவே வைத்துக் கொள்ள வேண்டும்.

## பேராசிரியர் கல்கியின் நினைவு நாள்

சென்ற வாரம் சென்னை அமரர் கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி தமிழகத்துக்கும் தமிழ் மொழிக்கும், தாய் நாட்டுக்கும் செய்த அரிய தொண்டுகளை யெல்லாம் நினைவு கூர்ந்து அஞ்சலி செய்தது.

சென்னை கச்சாலீச்வரர் அக்ரகாரத்திலுள்ள தேசிய வாலிபர் சங்கத்தினர் சென்ற ஞாயிற்றுக்கிழமை 4-12-55 அன்று செட்டி நாட்டரசர் முத்தையாச் செட்டியார் அவர்கள் தலைமையில் கொண்டாடினார்கள். செட்டி நாட்டரசர் திரு கல்கி அவர்கள் தமிழிசைக்கும் தமிழுக்கும் செய்த சேவைகளைப் பாராட்டினார். கல்வி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமண்யம் கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்துக் கல்கியின் சேவைகளைப் பாராட்டினார். 'கல்கி' ஆசிரியர் சோமு ''கல்கியின் நூல்களை நன்றாகப் படித்து, அவர் இலக்கியத் துறையில் வகுத்த வழிகளையும் சோதனைகளையும் நன்கு அறிந்து அவற்றிலிருந்து மன எழுச்சி பெறுவதே அவருக்குச் செய்யும் அஞ்சலி!'' என்றுரைத்தார். திரு டி. கே. ஷண்முகம், கொத்தமங்கலம் சுப்பு, திரு எஸ். டி. சுந்தரம், திரு எஸ். கே. பாலசுப்பிரமண்யம், ஸ்ரீமதி விஜயலட்சுமி, திரு எம். எஸ். சுப்பிரமண்ய அய்யர், திரு ம. பொ. சிவஞானம் ஆகிய பல அறிஞர்கள் பேசினார்கள்.

மறுநாள் 5-12-55 அன்று சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பிலும், பாரதியார் சங்கத்தின் சார்பிலும் ரஸிக ரஞ்சனி சபா ஹாலில் ஒரு மாபெரும் கூட்டம் நடைபெற்றது. நாமக்கல் கவிஞர் தலைமைவகித்தார். 'கல்கி' திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் காங்கிரஸ் தொண்டராக இருந்த காலத்திலிருந்தே நன்கு தெரிந்திருக்கும் நாமக்கல் கவிஞர் இவ் வைபவத்துக்குத் தலைமை வகித்தது மிகப் பொருத்தமாக இருந்தது. அவர் தமது தலைமை யுரையில் ''கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் சிறந்த பேச்சாளர், எழுத்தாளர், சிந்தனையாளர், நண்பர்'' என்று உணர்ச்சி வசப்பட்டுக் குறிப்பிட்டார். பின்னர் செட்டி நாட்டு அரசர், திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், திரு ம. ப. பெரியசாமித் தூரன், திரு கி. வா. ஜகந்நாதன், திரு மீ. ப. சோமசுந்தரம், திரு எஸ். ஏ. பி. அண்ணாமலை, திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர், திரு கு. ராஜவேல், திரு டி. கே. ஷண்முகம், திரு எல். நடராஜன், திரு 'சுகி', திரு அகிலன், ஸ்ரீமதி சகுந்தலா பாரதி முதலிய பல அன்பர்கள் பேசினார்கள். கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் 'கள்வனின் காதலி'யை நாடகமாக்கிய திரு எஸ். டி. சுந்தரம் அவர்கள் பேராசிரியர் கல்கியின் திருவுருவச் சிலையை அன்பளிப்பாகத் தந்திருந்தார். அந்த உருவச் சிலை செய்த சிற்பி திரு எஸ். டி. கிருஷ்ணமூர்த்தி அவர்கள். அந்தத் திருவுருவச் சிலையைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவர் திரு ம. பொ. சி. திறந்து வைத்தார்கள். கடைசியாகத் தலைவர் ராஜாஜி பேசினார்கள்.

அமரர் கல்கியைப் பற்றிப் பேசிய ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் கல்கி செய்த சேவைகளை மனம் விட்டுப் பாராட்டி மகிழ்ந்தார்கள். அவற்றை யெல்லாம் இங்கே கூறப் புகுந்தால் இந்தப் பத்திரிகை போதாது. ஆனால் அவர்கள் அத்தனை பேரும் எத்தகைய உணர்ச்சியை உண்டாக்கினார்கள் என்பதை ராஜாஜி வெகு அழகாக எடுத்துக் கூறி விட்டார். அதை இங்கே நினைவுபடுத்தினாலே போதுமானது, அக் கூட்டம் எப்படி அமைந்தது என்பதற்கு.

ராஜாஜி கூறினார்: ''நான் இந்தக் கூட்டத்துக்கு வந்ததே கிருஷ்ணமூர்த்தியைப் பற்றி மற்ற அன்பர்கள் பேசுவதைக் கேட்டு ஆறுதலும் அமைதியும் பெறுவதற்குத்தான். அந்த லட்சியம், அந்த ஆறுதல் எனக்குக் கிடைத்து விட்டது. ஒவ்வொருவரும் கல்கி கிருஷ்ணமூர்த்தியின் பல்வேறு குண விசேஷங்களை மிக நன்றாகப் பேசினார்கள். கல்கி ஆசிரியர் சோமு 'கிருஷ்ணமூர்த்தி அவர்கள் உள்ளத்தில் ஒளியிருந்தது. அது அவர் வாக்கிலும் நடையிலும் பிரகாசித்தது' என்று குறிப்பிட்டார். இப்படி ஒவ்வொருவரும் ஒவ்வொரு அம்சத்தைப் பாராட்டி வியந்தார்கள். இதைப் பார்க்கும்போது கோபிகைகள் நினைவுதான் வருகிறது. அந்தக் கிருஷ்ணமூர்த்தியைப் போலவே இந்தக் கிருஷ்ணமூர்த்தியும் பலருடைய அன்பைக் கவர்ந்து மாயம் விளைவித்து விட்டு மாயமாக மறைந்து விட்டார்!'' என்று குறிப்பிட்டார்.



நவம்பர் மாதம் 22-ந் தேதி டில்லி அருங்கலைக் கழகக் கூடத்தில், குமாரி ஒய். ஜி. ஸ்ரீமதியின் ஓவியக் கண்காட்சியை நமது உப ராஷ்டிரபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் திறந்து வைத்தார். கமலாதேவி சட்டோபாத்யாயா அவர்கள் தலைமை வகித்தார். கண்காட்சி 30-ந் தேதி வரையில் நடைபெற்றது. அறுபத்தாறு சித்திரங்கள் இந்தக் கண்காட்சியில் வைக்கப்பட்டிருந்தன. ஆரம்ப தினத்திலும், மற்ற எட்டு நாட்களிலும் ஏராளமான ஜனங்கள் வந்து பார்த்து மகிழ்ந்தனர். முதல் நாள் ஓவியக் கலைக் காட்சி திறப்பு விழாவில் உப ராஷ்டிரபதி பேசுவதையும், ஸ்ரீமதி கமலாதேவி சட்டோபாத்யாயா, குமாரி ஸ்ரீமதி ஆகியவர்கள் அமர்ந்திருப்பதையும் மேலே படத்தில் காணலாம்.

---

தமிழ் வளர்ச்சிக்குத் தெளிவான வசன நடை அவசியம். ஆனால் கருத்துச் செல்வம் இன்றியமையாதது. இரண்டும் சேர்ந்திருப்பதைக் கல்கி நடையில் பார்க்கலாம் என்றும் ராஜாஜி குறிப்பிட்டார்.

மங்கள நூலகத்தார் வெளியிட்டுள்ள 'பொன்னியின்செல்வன்' முதல் பாகத்தைத் திரு ம. பொ. சி. தலைவர் ராஜாஜிக்கும் அவைத் தலைவர் நாமக்கல் கவிஞருக்கும் அளித்தார். எழுத்தாளர் சங்கத்தின் காரியதரிசி திரு க. சோமசுந்தரம் நன்றி கூற விழா முடிந்தது.

## ஜனப் பிரதிநிதிகள்

சில தினங்களுக்கு முன் பாரத மக்கள் சபையில் போதிய அங்கத்தினர்கள் இராததால் மேற்படி சபை நடவடிக்கைகள் அடிக்கடி தடைப்பட்டன. அவ் விஷயமாக சபாநாயகர் அங்கத்தினர்களைக் கடிந்து கொண்டும் கூட நிலைமையில் அபிவிருத்தி ஏற்பட்டதாகத் தெரியவில்லை. "சபையில் போதிய அங்கத்தினர்கள் வந்து சேராவிடில், சபையை ஒத்திவைக்கும்படி நேரும்" என்று சென்ற வாரத்தில் கூட உதவி சபாநாயகர் அங்கத்தினர்களை எச்சரிக்கும்படி நேர்ந்திருக்கிறது. மக்கள் சபையில் உள்ள காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கு நேருஜி அனுப்பியுள்ள சுற்றுக் கடிதத்தில், பல அங்கத்தினர்கள் புது டில்லியில் இருந்தும் கூட சபைக்கு வராததால், ஒரு மசோதா தோல்வியடைந்த தென்றும், அதனால் அரசியல் சிக்கல்கள் ஏற்பட்டுள்ளன என்றும் மிகுந்த வருத்தத்துடன் குறிப்பிட்டிருக்கிறார்.

ஜனங்கள் தங்களுடைய பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுத்துள்ள அங்கத்தினர்கள் சபை நடவடிக்கைகளில் கலந்து கொள்ளாவிடில், தங்கள் கடமையைச் செய்யத் தவறியவர்கள் ஆகின்றார்கள். முக்கிய காரணம் இல்லாமல் அங்கத்தினர்கள் அடிக்கடி சபைக்குச் செல்லாமல் இருந்து விடுவதால், தேசத்துக்குக் கஷ்ட நஷ்டம் உண்டாகும் என்பதை அவர்கள் கவனித்து நடவடிக்கைகளில் கலந்து கொள்ள வேண்டும். இனி அத்தகைய விபரீத நிலைமைக்கு இடம் கொடுக்காமல் மக்கள் சபை அங்கத்தினர்கள் நடந்து கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

# *In the great tradition..........*

The great tradition in Russian literature right from the days of the great Pushkin to our own times has been one of devoted search for truth, for realism in expression and mastery of the writer's craft. That this great heritage is upheld and adored by the present generation is a fact which becomes instantly clear on reading these new novels by Soviet Masters.

| | |
|---|---|
| Chapayev | 2—9—0 |
| Short Stories—Chekhov | 2—9—0 |
| Rook Herald of Spring | 1-15—0 |
| Nisso | 2-13—0 |
| Verkhovina Land so Dear | 2—8—0 |
| Three Short Novels | 1—3—0 |
| Short Stories.Gonchar | 1—5—0 |

*Postage Extra*

**NEW CENTURY BOOK HOUSE**

199, MOUNT ROAD, MADRAS

**V/O MEZDUNARODNAYA KNIGA, Moscow 200, U.S.S.R.**

*Adcrafts*



# பார்வதி

கல்கி திரு. ரா. கிருஷ்ணமூர்த்தி நினைவுச் சிறுகதைப் போட்டி

ராமப்ரியா

கிழவர் படுக்கையில் புரண்டு படுத்தார். மூன்று மாதங்களாக அவர் இதே படுக்கையில் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருக்கிறார். அவருக்கு எழுபது வயது தாராளமாக இருக்கும். நல்ல உயரம். வயதானபடியாலும், மூன்று மாதங்கள் வியாதியில் படுத்து விட்டதாலும் கிழவரின் உடல் தளர்ந்து வாடி இருந்தது. மற்றப்படி வயது காலத்திலேயே இவ்வளவு ஆஜானுபாகுவாய் நல்ல களையாக இருக்கும் மனுஷர் இளம் பருவத்தில் எப்படி இருந்திருப்பார்!

கிழவரின் பக்கத்திலேயே, அவரையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த அவரது மனைவி பார்வதி—அவருடன் ஐம்பது வருஷ காலம் சுக துக்கங்களைப் பகிர்ந்து கொண்டவள் – உட்கார்ந்து ஏக்கத்துடன் பெருமூச்சு விட்டாள்.

பதினைந்து நாட்களுக்கு முன் டாக்டர் சொன்னது இப்போதுதான் சொன்ன மாதிரி அவள் காதில் ரீங்காரம் செய்கிறது.

"பாட்டி! உங்கள் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் தந்தி கொடுத்து விடுவது நல்லது!"

பார்வதியின் அடி வயிற்றில் சங்கடம் செய்தது. ஒரு கை அவளையும் அறியாமல் கழுத்தில் இருந்த திருமங்கலியத்தை ஒருதடவை தடவிக் கொடுத்தது.

"என்ன டாக்டர், பயமுறுத்துகிறீர்களே!" என்று கூறினாள் பார்வதி திகிலடைந்த குரலுடன்.

"பயமென்ன பாட்டி! தாத்தாவுக்கு என்ன வயசாகவில்லையா! நாங்களெல்லாரும் உங்கள் வயசு இருந்து முழு வாழ்க்கையையும் அனுபவிக்கப் போகிறோமா! எதற்கும் மனசைத் தைரியப் படுத்திக் கொள்ளுங்கள்.

# உ வது பரிசுக் கதை



அவருக்கு அன்று வந்தது போல் இன்னொரு முறை மார்வலி வந்தால் அப்புறம் நம்ப முடியாது. இதுவரை தாத்தா அந்த மார்வலி வந்த பிறகு, பிழைத்திருப்பதே என்னுடைய மருந்து பலத்தினால் இல்லவே இல்லை. உங்கள் மாங்கல்ய பலத்தினால்தான். அதனால் என்னை நம்புவதைக் காட்டிலும் உங்கள் மாங்கல்ய பலத்தை நம்புங்கள்!'' என்று கூறிவிட்டு டாக்டர் போய் விட்டார்.

பக்கத்து வீட்டுப் பிள்ளையைக் கூப்பிட்டு அனுப்பினாள். ஒவ்வொரு மூலைக்கு ஒருவராயிருக்கும் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் தந்தி கொடுக்கச் செய்தாள்.

அவர்களும் விழுந்தடித்துக் கொண்டு ஒவ்வொருவராக வந்து கொண்டிருக்கிறார்கள். கிழவரின் தேக நிலை அப்படியே இருக்கிறது. பார்வதியும் கிழவரின் பக்கத்தை விட்டு அசையாமல் உட்கார்ந்து இருக்கிறாள்.

'கிழவர் போய் விட்டால்!' – இதை நினைக்கும் போதே பார்வதியின் அடி வயிற்றில் சொல்லத் தெரியாமல் சங்கடம் தோன்றி அரித்தது.

'' அம்மா, சாப்பிட வருகிறீர்களா !'' – இது பார்வதியின் மூத்த நாட்டுப் பெண் மாமியாரைச் சாப்பிடக் கூப்பிடுகிறாள். இரண்டாவது நாட்டுப் பெண்ணும் கூடவே இருக்கிறாள்.

'' நான் ஒன்றும் இப்பொழுது சாப்பிட வரவில்லை. நீங்களெல்லாம் சாப்பிட்டு விட்டு எனக்கு எடுத்து வையுங்கள். எனக்கு வேண்டும் போல் இருந்தால் பிறகு வருகிறேன் !''



என்று சொல்லி விட்டான். இருவரும் பேசாது போய் விட்டார்கள்.

பார்வதி மறுபடியும் கிழவரின் அருகே வந்து உட்கார்ந்தாள். கிழவரைப் பார்க்கப் பார்க்க அவள் உள்ளம் உருகித் தவித்தது.

மெதுவாக அவர் தலையைத் தடவினாள். அவள் விழிக் கடையில் கண்ணீர் வழிந்தோடியது.

மறுபடியும், எண்ண அலைகள் மோதின. அவர் போய் விட்டால்......! கழுத்தில் இரண்டு தாலி. அவர் போய் விட்டாலும் எல்லாரும் அனுதாபம் காட்டுவது போல் அவளைச் சுற்றித்தான் எல்லோரும் இடித்துக் காண்பிப்பார்கள். "ஐயோ, பாவி! மஞ்சளும் குங்குமமுமாய் நீ போகக் கூடாதா! இன்னொருவர் காலுக்குக் கீழே கிடக்கும்படியாக விதி சதி செய்து விட்டதே!" என்று அவள் நெஞ்சப் புண்ணில் கோலை இடுவார்கள். ஆனால் அதுவும் வாஸ்தவம்தானே!

அவள் வரைக்கும் ஒன்றுக்கும் குறை வில்லை. பகவான் இந்தத் தாலியை மட்டும் பிடுங்கிக் கொள்ளாமல் அத்துடன் அவளை அழைத்துக் கொண்டாரானால், அவளைப் போல் அதிர்ஷ்டசாலி இந்த உலகிலேயே ஒருவரும் இருக்க மாட்டார்கள். ஆனால்....ஆனால்.... என்ன ஆனால்! அந்த அதிர்ஷ்டம் தனக்குக் கிட்டுமா? இது பெரிய பிரச்னைதான்!

முழு வாழ்வு இனிக்க இனிக்க வாழ்ந்த பார்வதியின் சிந்தனை ரதம் ஐம்பது வருஷங்களுக்கு முன் ஓடோடியும் சென்றது. அதில் தான் எத்தனை மேடு பள்ளங்கள்! எவ்வளவு சுகதுக்கங்கள்! எவ்வளவு வேறுபட்ட அனுபவங்களை யெல்லாம் அனுபவித்திருக்கிறாள்!

யோசித்துக் கொண்டே இருக்கும் பொழுது அவள் கண் முன்னே தஞ்சை ஜில்லாவில் செழுமை மிகுந்த கிராமமும் அதில் ஒரு சிறிய ஓட்டு வில்லை வீடும் வந்து நின்றன.

அப்பொழுது பார்வதி பதினான்கு வயதுச் சிறுமி. பாலகி என்றுகூடச் சொல்லலாம். மெலிந்த உடலும் சுங்கடிப் புடவை கணுக் காலுக்கு மேல் அணிந்தவாறு பயந்து நடுங்கிய படி ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தாள்.

வீட்டில் கறந்த ஒரு படி பாலை வெண்கல உருளியிலிட்டு அடுப்பில் வைத்திருந்தாள் அவளுடைய மாமியார். மாட்டுப் பெண் வெறுமனே நின்று கொண்டிருப்பதைப் பார்த்து, "இந்தா பார்வதி! இந்தப் பாலைப் பக்குவமாகக் கொதி வந்ததும் இறக்கு. குடித்தனக்காரப் பெண் இப்படியா வெறுமனே நின்று கொண்டிருப்பது! இதெல்லாம் தெரிய உனக்கு வயசாகவில்லையா!" என்று கடச் கடச் சொல்லி விட்டு எழுந்து போனாள்.

பாவம்! பேதைச் சிறுமியின் உள்ளம் குறுகியது. கண்களில் சுரக்கும் நீரை ஒருவருக்கும் தெரியாமல் சுண்டிக் கீழே போட்டவாறு அடுப்பின் கீழ் உட்கார்ந்தாள். பார்வதியின் இளம் மனதில் இந்தப் புக்ககமும் இல் வாழ்க்கையும் புரியாத புதிராகவே இருந்தன. அம்மாவானால் இப்படிச் சதா வெடு வெடு வென்று விழுவாளா! இந்த எண்ணம் தோன்றியதும் அவள் கண்முன் பால், உருளி, அடுப்பு எல்லாம் மறைந்து போய்ப் பத்து மைல்களுக்கு அப்பாலுள்ள தன் பிறந்தகத்தில் இதே வேளையில் தங்கை தம்பிகளுடன் அடுக்கு நிறையப் பழையதை அம்மா அருமையாகப் பழங் குழம்பை விட்டுப் போடுவதும், முழங்கை வரைக்கும் மோர் வழியப் போட்டுப் போட்டுக் கொண்டு கும்மாள மடித்துக் கொண்டு சாப்பிடுவதும் தோன்றின. அந்த இன்ப நினைவில் குழந்தை உள்ளம் ஒன்றிவிடவே தன் சூழ்நிலையையே மறந்தவாறு நின்றாள்.

பால் கொதி வந்து பொங்க ஆரம்பித்து வழியவும் தொடங்கியது. கூடத்தில் பூஜையில் உட்கார்ந்திருந்த மாமனார், "யாரங்கே! சமையலறையில் பால்பொங்கும் வாசனை அடிக்கிறதே!" என்று தம் கட்டைத் தொண்டையில் கர்ஜித்த பிறகுதான் பார்வதிக்கு இந்த உலக பிரக்ஞை வந்தது. அதற்குள் மாமியார் கொல்லைப் புறத்திலிருந்து வருவதைப் பார்த்ததும் திகிலடைந்த பார்வதி அவசரம் அவசரமாய்ப் புடவைத் தலைப்பினால் பால் உருளியை இறக்க முயன்றாள். "புடவைத் தலைப்பினால் பிடிக்காதேடி! பால் கொட்டிப் போகும்!" என்று கத்தியபடியே மாமியார் ஓடோடி வந்தாள். மாமியாரின் சப்தம் கேட்டவுடன் குலை நடுங்கி உருளியைக் கை தவற விட்டு விட்டாள். பால் அப்படியே இளம் கரங்களில் விழுந்து கால்களில் கொட்டி உடல் முழுவதும் வழிந்தோடியது.

முக்கால் பிராணனும் போனமாதிரி வெட வெட வென்று நடுங்கியபடி பால் அபிஷேகத்துடன் குறுகியபடி நின்று கொண்டிருந்தாள்.

அன்று மாமியார் வைத வசவுகளை இன்று நினைத்தாலும் உள்ளம் நடுங்கியது. ரணமாய் எரியும் கால்களுக்கு யாரும் இதமாக மருந்து தடவவில்லை. அதைவிட அதிகமாய்ப் புண்ணுப் போன இளம் மனத்துக்கு இன்பமாக இத மொழி கூற அத்தனை பெரிய குடும்பத்தில் ஒருவரையும் காணோம். புருஷர்கள் முதல் அனைவரும் உருளி நசுங்கிப் போய்விட்டதா வென்று ஆராய்ச்சி செய்வதிலும், பால் நஷ்டமாகப் போனதையும், பார்வதியின் அசட்டுத் தனத்தையுமே குறுணி குறுணியாக அளந்து

கொண்டிருந்தார்கள். ஆனால் ஒரே ஒரு ஆத்மா மட்டும் அவளுக்காக மறைவில் கண்ணீர் சிந்திக் கொண்டிருந்தது.

அதுதான் அவளுடைய கணவன், இருபதே வயது நிரம்பிய சிறுவன் பரமசிவன்! அன்று இரவு படுக்கையறையில் பரமசிவன் தவித்த தவிப்பும், காலை அன்போடு தடவிக் கொடுத்துத் தேற்றிய தேறுதல்களையும், கொஞ்சிய கொஞ்சல்களையும் அந்த அறையின் நான்கு பக்கத்துச் சுவர்களுக்கும் காதிருந்தால் அவை அற்புதமான காதல் காவியம் பாடியிருக்கும்!

அன்றிலிருந்தே பார்வதிக்குத் தைரியம் வந்து விட்டது. தனக்காக அன்புடன் இழையும் இதயம் ஒன்று இருக்கிறது, தனக்கு வந்தது போல் தவிக்கும் ஆத்மா இருக்கிறது என்ற எண்ணம் அவளுடைய குழந்தை உள்ளத்துக்கு அமிர்த தாரையை வர்ஷிப்பது போல் குளிர்ச்சியாக இருந்தது. அவளுடைய கஷ்டத்தைத் தன் கஷ்டமாக நினைத்து அனுதாபப்படும் ஒரு தோழன் என்றே அவரைப் பற்றி அவள் நினைத்து இன்பமடைந்தாள்.

படுக்கையில் புரண்டு கொண்டிருந்த கிழவர் கண்களைத் திறந்து பார்த்தார். பார்வதியும் திடுக்குற்றுக் கண்களைத் துடைத்தவாறு கனவுலகத்திலிருந்து விழித்து நனவுலகத்துக்குத் திரும்பி வந்தாள்.

"நீ இன்னும் சாப்பிடவில்லையா!" என்று மெலிந்த குரலில் கேட்டார். 'இல்லை' என்றபடி தலையை அசைத்தாள் பார்வதி. வயதான படியால் அவள் தலை அசையும் போது காதும் அதில் போட்டுக் கொண்டிருந்த பைசா அளவுள்ள வைரத்தோடும் சேர்ந்து அசைந்தன. தலையும் பஞ்சாய் நரைத்த போதிலும் நெற்றியில் காலணா அகலக் குங்குமமும் மஞ்சள் பூசிய முகமும் அலாதி லக்ஷணமாக இருந்தன. கிழவர் சற்று நேரம் அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"எனக்கு ஆகாரம் கொண்டு வா!" என்றார் மெதுவாக. பார்வதி உடனே அலாதியான தென்புடன் விறு விறு வென்று உள்ளே எழுந்து போய் மோரை விட்டுச் சாதத்தைக் கரைத்து எடுத்துக் கொண்டு வந்தாள். கிழவர் அவள் மேல் சாய்ந்தபடி ஆகாரத்தைச் சாப்பிட்டு விட்டு மறுபடியும் படுக்கையில் படுத்துக் கொண்டே, "இந்தா! நீயும் போய்ச் சாப்பிட்டு விட்டு வா! முகம் வாடிப்போய் இருக்கிறதே!" என்றார் அன்புடன். இன்னமும் அவருக்குத்தான் அவள் பேரில் எவ்வளவு அன்பு! எத்தனை கரிசனம்!

பார்வதி பேசாமல் எழுந்து சாப்பிடச் சென்றாள். மாட்டுப் பெண்கள் போட வாயே திறவாமல் சாப்பிட்டு விட்டு மறுபடியும் கிழவரின் அருகே வந்து உட்கார்ந்தாள். அவர் நன்றாக நிம்மதியாகத் தூங்குவது தெரிந்தது. சப்தம் செய்யாமல் தூரத்தில் ஒரு துண்டை விரித்துப் படுத்துக் கொண்டாள். செய்யாதே என்று பெரியவர்கள் சொல்லும் காரியத்தைப் பிடிவாதமாகத் துஷ்டப் பிள்ளைகள் செய்வது போன்று, பார்வதிக்கும் நினைக்கக் கூடாது என்று தன்னால் ஆனமட்டும் மனத்தை அடக்கினாலும் அவளை மீறிப் பழைய நினைவுகள் பீறிட்டுக் கொண்டு வந்தன.

இப்பொழுது அவள் மனத்தில் சென்னைப் பட்டினமும் அதில் மயிலாப்பூரில் ஒரு சந்தில் பத்து ரூபாய் வாடகையில் இருந்த இரண்டு உள்ளும் வந்து நின்றன. வக்கீல் பரீட்சை பாஸ் செய்த பரமசிவம் அந்தச் சின்னஞ்சிறிய வீட்டுக்குள் இருந்து கொண்டு ஒரு பெரிய வக்கீலிடம் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தான். அந்தச் சிறிய வீட்டில், மாமனார் அனுப்பும் ஐம்பது ரூபாயில், அவர்கள்தாம் எவ்வளவு பதவிசாக, இன்பமாக வாழ்க்கை நடத்தினார்கள்.

இப்பொழுது அவள் பிள்ளைகள் ஒவ்வொரு வரும்மாதம் ஐந்நூறுக்குக் குறையாமல் சம்பாதிக்கிறார்கள். அதை வைத்துக் கொண்டு குடித்தனம் செய்ய மாட்டுப் பெண்களுக்குப் போதவில்லை யென்று கையை விரிக்கிறார்கள்! விசித்திரமான பெண்கள்! பார்வதி சிக்கனமாகக் குடித்தனம் செய்யும்போது காலையில் ஒரு வேளைச் சமையல்தான். இரவு இருவரும் மோருஞ் சாதம் சாப்பிட்டுச் சிக்கனமாக வாழ்க்கை நடத்தினார்கள்.

எல்லாரும் சொல்வது போல, 'பார்வதி வந்த வேளை' லக்ஷ்மி கடாக்ஷம் பொழிய ஆரம்பித்தது. பரமசிவன் கைநிறையச் சம்பாதிக்கத் தொடங்கினான். வாடகைக்கே ஒரு பெரிய வீட்டில் வசிக்க ஆரம்பித்தார்கள்.

கொஞ்சம் நல்ல நிலைமைக்கு வந்தவுடன் தான் சுற்றத்தார்களுக்கு எல்லாம் எவ்வளவு பொறுமை! பிறந்தகத்தைச் சேர்ந்தவர்கள் ஸ்வமாகப் பேசி உதவி கேட்டார்கள். புக்ககத்தினரோ அதிகாரத்துடன் அவர்களிடம் சலுகை பெற்றார்கள். கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் ஒரு பெரிய பங்களாவையே விலைக்கு வாங்கி விட்டார்கள்.

கிழவர் முனகிக் கொண்டே சற்று அசங்கினார். பார்வதியின் சிந்தனையும் கலைந்தது. மெதுவாகப் புகுந்து போய்ப் பார்த்தாள். ஒன்றும்



இல்லை. வெறுமனே தூக்கத்தில்தான் புரண்டு படுத்திருக்கிறார். மறுபடியும் பார்வதிக்குப் படுக்கத் தோன்றவில்லை.

பக்கத்து உள்ளில் ஒரே பேச்சுச் சப்தம் கேட்டது. பார்வதியாக அதை உன்னிப்பாகக் கவனிக்காவிட்டாலும் அவர்கள் பேச்சு அவள் காதில் விழத்தான் செய்தது. கணீரென்று உரக்கவே அவள் பிள்ளைகள் பேசினார்கள்.

“அப்பாவுக்கு என்னவோ அதிகமாகிவிட்டது என்று தந்தியைப் பார்த்ததும், ‘இனி பார்க்கப் போகிறோமோ இல்லையோ’ என்று ஓடோடியும் வந்தேன். ஆபீஸில் வேறே வேலை அதிகம். இப்போது ஊருக்குப் போகிறதா, இருக்கிறதா என்று தெரியவில்லை. அப்பாவின் உடல் நிலையைப் பார்த்தால் மதில் மேல் இருக்கும் பூனையைப் போல் இருக்கிறது. ஒரே குழப்பமாக இருக்கிறது!” இது பார்வதியின் இரண்டாவது பிள்ளை ரத்தினத்தின் குரல். அவனுக்கு என்றைக்குமே பெற்றோர்களிடம் ரொம்ப பாசம் உண்டு.

“நான்தான் சொன்னேனே, ஒன்றும் இருக்காது, வெறுமனேயாவது தந்தி கொடுத்திருப்பார்களென்று. அப்படியும் உயிர்ப் பிராணன் இலேசில் போகாது என்பார்கள்!” என்றாள் ரத்தினத்தின் மனைவி செல்லம். அவள் என்றுமே துடுக்காகத்தான் பேசுவாள். மட்டு மரியாதையும் கிடையாது.

“இருக்கிற நிலைமையைப் பார்த்தால் அப்பாவுக்கு இந்த கண்டம் தப்பிவிடுமென்று நினைக்கிறேன்!” இது மூத்த பிள்ளை ராஜூவின் குரல். அப்பா பிழைப்பதில் அவனுக்கு விருப்பமா, வெறுப்பா என்று அந்தக் குரலிலிருந்து கண்டுபிடிக்க முடியவில்லை பார்வதிக்கு.

“இப்படி வயதானவர்கள் அதிகமான பிறகு பிழைத்துக் கொண்டால் ஆகவே ஆகாதாம். அது குடும்பத்துக்கே கெடுதலாம்!” என்று நீட்டி முழக்கிக் கொண்டு அத்தைப் பாட்டி மாதிரி சொன்னாள் செல்லம்.

“அதற்காகப் பிழைத்துக் கொண்டால் கெடுதல் என்று அவர்களைக் கொன்றுவிடுவார்களா! எல்லாம் அவரவர்கள் தலையெழுத்தின்படிதான் நடக்கும்!” என்று வேதாந்தம் பேசினாள் மூத்த நாட்டுப் பெண் முத்து.

பார்வதிக்கு அவர்களுடைய பேச்சைக் கேட்கச் சகிக்கவில்லை. இன்னும் அது எத்தனை தூரம் போகுமோ என்ற பயம் வேறு மனத்துக்குள் வந்து விட்டது.

தன் அறையிலிருந்து வெளியே வந்து மெதுவாக “ராஜூ!” என்று கூப்பிட்டாள். பெரிய பிள்ளை “என்ன அம்மா!” என்று தூக்கி வாரிப் போட்ட மாதிரி ஓடிவந்தான். அவனைத் தொடர்ந்து சின்னப்பிள்ளை, நாட்டுப் பெண்கள் எல்லாரும் வரிசையாக வந்தார்கள்.

“ஒன்றும் விசேஷமில்லை. அப்பா இன்றுதான் தூங்குகிறார். அதனால் பயம் இல்லை என்று தோன்றுகிறது. நீங்கள் எல்லாரும் மாடியிலேயே போய் நிம்மதியாகப் படுத்துக் கொள்ளுங்கள்!” என்றாள் பார்வதி வெகு நிதானமாக.

எல்லோரும் மறு பேச்சு பேசாமல் பள்ளிக்கூடக் குழந்தைகள் வாத்தியார் கட்டளைக்குக் கீழ்ப்படிவது மாதிரி மாடிப்படிகளில் ஏறிச் சென்றார்கள். அவர்கள் எல்லாருக்குமே அம்மா தங்கள் சம்பாஷணையைக் கேட்டு விட்டாள்; அதனால்தான் அங்கே படுத்துக் கொள்ளச் சம்மதிக்கவில்லை என்று புரிந்து விட்டது. அவர்கள் போகிறவரை பார்த்துக் கொண்டு இருந்து விட்டு மீண்டும் தன் அறைக்கே வந்து உட்கார்ந்தாள் பார்வதி.

பார்வதியின் மனத்தில் மீண்டும் சிந்தனைத் தொடர் படர்ந்தது.

பெண்களாவது தேவலை. மாப்பிள்ளைகள் எப்படியிருந்தாலும் அவர்களுக்குப் பாசம் போவதில்லை. இந்தப் பிள்ளைகள் இருக்கிறார்களே, எல்லாம் காரியம் ஆகிறவரைதான் குழைவார்கள். அதன் பிறகு அவர்கள் மனைவிகள் இருக்குமிடம்தான் சொர்க்கம். இது பார்வதியின் அனுபவ பூர்வமான தீர்மானம்.

இப்பொழுது நடந்த மாதிரி இருக்கிறது. இருபது வருஷங்களுக்கு முன்னால் ரத்தினத்துக்குக் கல்யாணமாகி ஒரு வருஷத்துக்கெல்லாம் அவனிடம் வந்து இருக்கச் சொல்லிப் பார்வதிக்கு ஒரு நாளைக்கு ஒரு கடிதம் வந்து கொண்டிருந்தது.

“குழந்தை ஒவ்வொரு கடிதத்திலும் நம்மை வரச் சொல்லி எழுதுகிறான். அவனுக்கும்தான் நம்மகத்துக் காரியங்களைப் பழக்கிக் கொடுக்க வேண்டாமா! நீங்களும் நானுமாகத்தான் போய் ஒரு பத்து நாட்கள் இருந்துவிட்டு வருவோமே!” என்றாள் பார்வதி கணவரிடம்.

“எனக்குக் கோர்ட்டில் வேலை நிறையக் கிடக்கிறது. என்னால் வர முடியாது. நீ வேண்டுமானால் போய்ப் பத்து நாட்களோ ஒரு மாதமோ இருந்து மாட்டுப் பெண்ணைச் சீர் திருத்திவிட்டு வா!” என்று சொன்னார். அவர் குரலில் பரிகாசம்தான் மிகுதியாயிருந்தது.

ஆனால் பார்வதி மனம் கோணாமல் பம்பாய்க்கு ரத்தினத்தினிடம் புறப்பட்டுச் சென்றாள்.

ரத்தினம் பெரிய வேலையில் இருப்பதால் வீட்டில் சமையலுக்கு ஆள் போட்டிருந்தார்கள். அந்த வீட்டில் சமையல்காரன் வைத்ததுதான் சட்டம். உள்ளே போய்ப் பார்த்து ஒன்றும் செய்ய மாட்டாள் ரத்தினத்தின் மனைவி செல்லம். போனவுடனேயே மாட்டுப் பெண்ணைத் திருத்துவது போல் தான் கெட்ட பெயர் வாங்கிக் கொள்ளச் சம்மதமில்லை பார்வதிக்கு. ரொம்பவும் பொறுத்துக் கொண்டு இருந்து ஒரு வாரம் தள்ளி விட்டாள். கூஜாவில் காய்ச்சிய பசும்பாலிலிருந்து ஒரு டம்ளர் பாலைச் சமையல்காரன் கடகட வென்று குடித்துவிட்டுத் தாராளமாக ஒரு டம்ளர் தண்ணீரைக் கூஜாவுக்குள் கொட்டி அந்தப் பால் அளவைச் சரிப்படுத்துவதைத் தன் கண்ணால் பார்த்தாள் பார்வதி. அதற்குமேல் பொறுமையாக இருக்க முடியவில்லை.

“செல்லம், செல்லம்!” என்று உரக்கக் கூவினாள் பார்வதி.

மாடியில் தன்னை வெகு கவனத்துடன் அலங்கரித்துக் கொண்டிருந்த செல்லத்துக்கு உடனே வர முடியவில்லை. “ஒரு நிமிஷம் இருங்கள், அம்மா! இதோ வருகிறேன்!” என்று மேலே இருந்து பதில் குரல் கொடுத்து விட்டு மீண்டும் தன் காரியத்திலேயே கண்ணாக இருந்தாள். ஒரு நிமிஷம் பத்து நிமிஷமாகி விட்டது. பார்வதிக்குக் கீழே இருப்புக் கொள்ளாமல் மாடிக்குப் போனாள். அப்போது

அலங்காரமெல்லாம் முடிந்து கண்களுக்கு மை தீட்டிக் கொண்டிருந்தாள் செல்லம்.

மாமியாரின் வருகையைப் பார்த்தவுடன், "என்ன அம்மா! நீங்கள் மாடியேறி வருவானேன்! நானே இதோ கீழே வர இருந்தேன். எதற்காகக் கூப்பிட்டீர்கள்!" என்று குழைவாகப் புன்சிரிப்புடன் கேட்டாள். செல்லத்துக்கு மனத்தில் ஆயிரம் இருந்தாலும் வெளியே வெல்லமாகப் பேசி எதிரிகளைக் கவரும் சக்தி ரொம்ப உண்டு. பார்வதி ஆத்திரத்துடன் சமையல்காரன் பாலைக் குடித்து விட்டுத் தண்ணீரை விட்டதைப் பார்த்ததாகச் சொன்னாள்.

"இதெல்லாம் நாம்தான் கவனிக்கவேண்டும். எல்லாவற்றையும் சமையல்காரனே கதி என்று இருந்தால் அவன் இப்படித்தான் செய்வான். காசு கொடுத்துப் பால் வாங்கி அந்தச் சந்து பூராவும் அவன் குடித்து விட்டுத் தண்ணீரை நீங்கள் குடிப்பதால் நமக்குக் காசுக்குக் காசு தான் நஷ்டம். உடம்பிலும் ஒட்டாது. சமையற்காரனுக்கு இத்தனை இடம் கொடுக்கக் கூடாது!" என்று அழுத்தமாக மாட்டுப் பெண்ணுக்குப் புத்திமதி சொன்னாள்.

செல்லத்தின் முகம் மாறியது. மையிட்ட கண்களில் நீர் பெருகிக் கண் மை கலைந்து கன்னத்தில் உருண்டோடியது. பக்கத்து அறையில் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த ரத்தினம் வெளியே வந்தான். செல்லத்தின் கண் வழியாக வந்த கண்ணீர் ரத்தினத்தின் இதயத்திலேயே சொட்டி விழுந்து அவன் உடலைத் தகித்தன.

"அம்மா! நீ பத்துநாட்கள் இருந்து விட்டுப் போய் விடுவாய். எங்களுக்குச் சமையல்காரன் இல்லாமல் ஒரு நிமிஷம் காலம் தள்ள முடியாது. வெளியே எத்தனையோ 'என்கேஜ்மெண்டு'களுக்குப் போக வேண்டி வரும். அப்போது அவனை நம்பாமல் என்ன செய்வது! அவன் காதில் நீ சொன்னது கேட்டு அவன் போய் விட்டால் எங்களுக்குத்தான் கஷ்டம். உன் காலில் நீ செய்தமாதிரி நாங்கள் இருக்க வேண்டுமென்று நீ எதிர்பார்க்கக் கூடாது!" என்று படபடவென்று பொரிந்து தள்ளி விட்டு உள்ளே சென்றான். அவன் கூடவே மாமியாரை வெற்றிப் பார்வை பார்த்து விட்டுச் செல்லமும் உள்ளே போனாள். பார்வதி கல்லால் அடித்தாற் போல் நின்றுவிட்டாள். திகைப்பு அவளைத் திணற வைத்தது. 'ரத்தினமா இப்படிப் பேசுகிறான்! அவனை எவ்வளவு அருமை பெருமையுடன் வளர்த்திருப்பேன்! இந்தப் புத்திமதி சொல்லக்கூடவா உரிமை இல்லை! பதினொன்று வயதில் பாலைக் கொட்டினதுக்குத் தான் பட்டபாடும், இப்போது சமையற்காரன் பாலைக் குடித்தான் என்று சொல்லக்கூட அதிகாரம் இல்லை யென்பதையும் நினைக்கப் பார்வதிக்கு நெஞ்சு வெடித்து விடும் போல் இருந்தது.

மறு நாளே ஊருக்குக் கிளம்ப எல்லாம் தயாராக எடுத்து வைத்துக் கொண்டு விட்டாள். ரத்தினம் முன் கோபத்தில் ஏதோ படபட வென்று சொன்னானே தவிர உடனேயே அதை அறவே மறந்து விட்டான்.

"ஏனம்மா அதற்குள்ளே ஊருக்குப் போகணும் என்கிறாய்! இங்கே உனக்குச் சௌகரியமாக இல்லையா!" என்று கொஞ்சலாகக் கேட்ட வண்ணம் தாயின் அருகே வந்து உட்கார்ந்தான் ரத்தினம்.

"நீ இருக்குமிடம் சௌகரியம் இல்லாவிட்டாலும் எனக்கு அசௌகரியமாகத் தோன்றுமா! அதெல்லாம் ஒன்றும் இல்லை. அப்பாவைத் தனியே விட்டு நான் எத்தனை நாட்கள் இங்கு இருக்க முடியும்! இன்று என்னை ரயில் ஏற்றி விட்டு விடு!" என்றாள் திடமான குரலில்.

ரயிலேறி உட்கார்ந்த பிறகு ரத்தினம் பார்வதியிடம் நெருங்கி வந்து, "அம்மா! எங்கள் பேரில் உனக்குக் கோபமொன்றும் இல்லையே!" என்றான்.

"அசடு! உன் பேரில் எனக்கு என்னடா கோபம்! அப்பாவுக்கு நான் இல்லாமல் ஒரு நிமிஷம் கூடச் சரியாக வராது. உன் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். செல்லமும் சிறிசு. அவளையும் கவனித்துக் கொள்!" என்று அன்போடு சொன்னாள்.

ரயில் நகர்ந்தது. பார்வதிக்கு ஏதோ அடைப்பிலிருந்து நீங்கின மாதிரி ஒரு உணர்ச்சி அவள் பெருமூச்சிலிருந்து வெளிப்பட்டது. கணவரின் கால்களில் ஓடிப்போய் விழுந்து 'ஓ'வென்று அழ வேண்டும் போல் தோன்றியது.

அப்போதிலிருந்தே கணவரை விட்டுப் பிள்ளைகளிடமோ பெண்களிடமோ போய் வாழும்

சபலத்தை அறவே ஒழித்தாள். பிள்ளைக ளுக்கும் பெண்களுக்கும் வேண்டும் போலிருந் தால் அவள் இருக்குமிடம் வரவேண்டியது. கணவர் தான் சகலமும் என்ற ஒரே எண்ணம் தான் அவளுக்கு. ஆனால் இப்போது அவரும் மோசம் பண்ணி விட்டால் அவள் கதி!......

பெற்றோர்களின் சஷ்டியப்த பூர்த்தியைக் கூட ரொம்பவும் விமரிசையாகக் கொண்டாடி னார்கள். ஊரரெல்லாம் "பார்வதிக்கென்னடி! அவள் அதிர்ஷ்டம் யாருக்கு வரும்! அவள் காலடி வைத்ததுமே லக்ஷ்மிதேவி 'வந்தேன், வந்தேன்' என்று வந்து விட்டாள். நன்றாக அலுக்கச் சலிக்க வாழ்க்கையை ருசி பார்த்து அனுபவித்தவள். பிள்ளைகளும், மாட்டுப் பெண் களும், பெண்களும் மாப்பிள்ளைகளும் தாங்கு, தாங்கென்று தாங்குகிறார்கள். சஷ்டி அப்த பூர்த்தி செய்துகொண்டு இரண்டு திருமங்கலி யம் கட்டிக் கொண்டாள். அவள் முகத்தில் விழித்தாலும் பாவம் போகுமே!" என்று அவள் காது கேட்கவே சொன்னார்கள். பார்வதிக்கு உச்சி குளிர்ந்து விட்டது. பெருமை அவளைப் பிய்த்துக் கொண்டு போனது.

ஆனால்......ஆனால்...கிழவருக்கு ஏதேனும் நேர்ந்து விட்டால் எவ்வளவு அவச்சொல் கேட்க நேரிடும்! "அவரைத் தவிக்க விட்டு விட்டுத் தான் போய்விட்டால் தன்னை மாதிரி அவரை யார் கவனிப்பார்கள்! கிழவருக்குப் பணிவிடை செய்ய அவளை விட்டால் யாருக்குத் தெரியும்! நம் குழந்தைகள் எல்லாரும் ஒற் றுமையோ வேற்றுமையோ, அவரவர்கள் இருக்கிற இடத்தில் ஆயுசோடு சௌக்கிய மாக இருக்கிறார்கள் என்று இருக்கும்போதே நம் காலம் தீர்ந்தால் சரி! இனி என்ன பாக்கி! தேவி! கற்பகாம்பிகே! உன் கோவிலுக்கு எவ்வளவு நெய்விளக்கு போட்டிருக்கிறேன். எனக்கு இரண்டாவது திருமங்கலியம் கட்டிக் கொள்ளும்படி அனுக்கிரகம் செய்ததற்காக உனக்கு ஒரு திருமங்கலியம் செய்து நான் கட்டவில்லையா! நான் கடைசி மூச்சு விடும் வரை அந்தத் தாலி என் கழுத்தில் இருக்க வேண்டும். இதுதான் உன்னை அல்லும்பகலும் வேண்டிக் கொள்கிறேன். இந்த ஒரு தடவை எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடு. அவ ருக்குப் பதிலாக என்னை எடுத்துக் கொள்ளடி அம்மா! என் தாயே!"

பார்வதி மனம் உருக வாய்விட்டுக் கதறி விட்டாள். இத்தனை நாட்களாகத் தான் வாழ்ந்த வாழ்க்கையை எண்ணி எண்ணிப் பார்க்க அவள் மனம் குழுறியது. யாராவது பார்த்தால், 'இந்தக் கிழத்திற்கு இன்னும் வாழ வேண்டும் என்ற ஆசையைப் பார்!' என்று கேலி செய்வார்கள். கண்களை அவசர அவசரமாய்த் துடைத்துக் கொண்டாள்.

** ** **

கொஞ்ச நாட்கள் கழித்து அந்த வீட்டில் அழுகைக் குரல் வந்தது. கிழவர் காலம் ஆகி விட்டார் என்று துக்கம் விசாரிக்க வந்தவர் களுக்கு ஒரு பெரிய அதிர்ச்சி அங்கே காத்துக் கொண்டிருந்தது. கிணற்றிலிருந்து ஜலம் பூஜைக்கு எடுக்கும்பொழுது கால் வழுக்கி விழுந்து விட்டாளாம் பார்வதி. மயக்கம் போட்டது தெளிவே வரவில்லையாம். ரத்தக் கொதிப்பு, இதயம் பலவீனமாகி விட்டது என்று டாக்டர்கள் சொல்லி விட்டார்களாம். அன்று சாயங்காலம் பார்வதி அமரத்துவம் அடைந்து விட்டாளாம்.

பார்வதியின் வயிற்றுக் குழந்தைகள் முதல் ஊரார் வரை ஒரே ஆச்சரியம். எல்லா விதத் திலும் அவள் அதிர்ஷ்டசாலிதான். அவ ளுடைய விருப்பப்படியே முழு வாழ்வு வாழ்ந்து விட்டுக் கடைசியில் மஞ்சளும் குங்குமமுமாய்க் கழுத்தில் ரோஜா மாலையுடன், கிழவர் குமுறிக் குமுறிக் கண்ணீர்விட அவள் போய்ச் சேர்ந்தது அதிசயத்திலும் அதிசயம். அவளுடைய பாக் கியமே பாக்கியம். ஊரார்கள் 'சத்புத்திரர்கள்' என்று சொல்லும்படி பார்வதியின் காரியங்கள் எல்லாம் கிரமமாக ஜாம் ஜாமென்று வெகு சம்பிரமமாகப் பிள்ளைகள் நடத்தினார்கள்.

இப்போது கிழவர் வாசலில் சாய்வு நாற்காலி யில் சாய்ந்தவாறே, "பார்வதி! என்னைத் தவிக்க விட்டு உன் இஷ்டப்படியே என்னை முந்திக் கொண்டாய். என்றைக்கும் நீ நினைத்ததைச் சாதித்துக் கொள்ளும் திறமை உனக்கு உண்டு. ரொம்பநாள் என்னைத் தனியே விட்டுவிடாதே! உன்னிடம் என்னையும் வெகு சீக்கிரம் அழைத் துக் கொள்!" என்று கண்ணீருடன் திரும்பத் திரும்ப முணுமுணுத்துக் கொண்டிருந்தார்."

அந்தப் பத்தினி தெய்வம் கணவரின் விருப் பத்தை நிறைவேற்றுவாள் என்கிற மாதிரி கோயில் மணி ஓம் ஓம் என்று ஒலித்தது.

மூலிகைகளாலான இருமல் மருந்து

# லிக்குப்ரூட்டா

## ஜலதோஷம், இருமல் இவைகளை சீக்கிரம் குணப்படுத்துகிறது

மூலிகைகளிலிருந்து பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட லிக்குப்ரூட்டா, இருமல், ஜலதோஷம், மார்சளி, கக்குவாய் இருமல், ஆஸ்த்மா, முதலிய வியாதிகளுக்கு ஏற்ற இயற்கை மருந்து. அதன் ஆறுதலளிக்கும் ஆவி சீக்கிரம் தொண்டையிலும், சுவாசக் கோசத்திலும் புகுந்து வீங்கி இருக்கும் சுவாசக் குழாய்களுக்கு உடனே குண மளிக்கிறது.




**இலவசம்!** நோயுற்றிருக்கும் தருவாயில் உபயோகமாயிருக்கும் இப்புத்தகத்தைப் பெறுங்கள்.

கூப்பனைப் பூர்த்திசெய்து அனுப்பவும் :-

டி. டி. கிருஷ்ணமாசாரி அண்டு கோ.,
தபால் பெட்டி நெ. 200, 331-333, தம்பு செட்டி தெரு, மதராஸ்

பெயர் ..................................................

விலாசம் ..................................................

MG/LQ. 11-X28 TM

# இந்தியாவில் சோவியத் தலைவர்கள்

சோவியத் தலைவர்கள் புல்கானினும் குருஷ்சேவும் பாரத நாட்டில் ஒரு வார காலம் சுற்றுப் பிரயாணம் செய்தனர். புது தில்லியிலிருந்து கல்கத்தா வரையில் அவர்கள் விஜயம் செய்த காட்சிகள் சிலவற்றை இந்தப் பகுதியில் காணலாம். 1. சோவியத் தலைவர்களுக்குப் புது தில்லி விமான நிலையத்தில் [வரவேற்பு. 2. ராஜகட்டத்தில் காந்தி மகானின் சமாதிக்குச் சென்று மலர் மாலை வைத்துச் சோவியத் தலைவர்கள் வணங்குகின்றனர். 3. லட்சக்கணக்கில் கூடியிருந்த பெருங் கூட்டத்தில் புல்கானின் பேசுகிறார்.





ஜனாதிபதி ராஜன்பாபு வுடன் சோவியத் தலைவர்கள் ராஜபவனத்துக்குச் செல் கின்றனர். பம்பாய் விமான நிலையத்தில் தங்களுக்கு மாலை சூட்டிய குழந்தைகளு டன் புல்கானினும் குருஷ் சேவும். உலக அதிசயங் களில் ஒன்றான தாஜ்மகாலைப் பார்த்து வியந்தனர். பங்க ளூர் நகரசபை அளித்த உபசாரத்துக்குக் குருஷ்சேவ் பதில் அளிக்கிறார்.





கல்கத்தா விமான நிலையத்தில் ஜவாஹர்லால் நேரு, கல்கத்தா முதன் மந்திரி பி. ஸி. ராய், கவர்னர் முகர்ஜி முதலியோர்கள் சோவியத் தலைவர்களை வரவேற்றனர். உதயசங்கர் நடனத்தைப் பார்த்துக் களித்தனர். கோவை முத்தூர் சிதம்பரம் பூங்காவில் சிறுமிகள் சோவியத் தலைவர்களுக்குப் பூச்செண்டு வழங்குகிறார்கள்.



சென்னை விமான நிலையத்தில் முதல் மந்திரி காமராஜ், கவர்னர் ஸ்ரீபிரகாசா முதலியவர்கள் ருஷ்யத் தலைவர்களை வரவேற்றனர். அவர்கள் சென்ற இடமெல்லாம் ஜனசமுத்திரம்தான். கிண்டி ராஜபவனத்தில் ராஜாஜியுடன் சோவியத் தலைவர்கள். நகர சபையின் வரவேற்பு. சென்னை ராஜ்யம் சோவியத் தலைவர்களுக்கு அளித்த அன்புப் பரிசுகள்.





## பொக்தாரி–வந்தனம்!

மத்திய பிரதேச ராஜ்யத்தில் எங்கோ ஒரு மூலே யிலிருக்கும் கிராமமாகிய பொக்தாரியைப் பற்றி யார் அறிவார்கள்? யாருக்குத்தான் அதைப்பற்றி தெரிந்துகொள்ள அக்கறை? ஆனால், எங்களுக்கு உண்டு. அது எவ்வித நமில் என்று கேட்பீர்கள்? பர்மா-ஷெல் ஸ்தாபனத்தார் 15000க்கு மேற்பட்ட சிப்பந்திகளையும் தேசத்தின் எல்லா முக்கிய இடங்களிலும் 800க்கு மேற்பட்ட டிப்போக்களையும், 4 கிளை ஆபீஸ்களையும், 22 டிவிஷனல் ஆபீஸ்களையும், 450 விற்பனை யாளர்களையும் திரட்டி நடத்தி வருகின்றனர் இவைகளின் உதவியைக் கொண்டே நாங்கள் பொக்தாரி கிராமத்தையும் இதைப்போன்ற ஆயிரக்கணக்கான கிராமங்களையும் நன்கு கவனித்து அவைகளுக்கு வேண்டிய எண்ணெயைத் தவறாமல் வழங்கி வருகிறோம்



**பர்மா-ஷெல்... பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது**




[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

4

குழந்தைப் பருவம் முதற்கொண்டு உண்மையை வழிபட்டு வருகிறேன் என்று என்னைப் பற்றி நான் சொல்லிக் கொள்ளலாம். உண்மையைக் கடைப் பிடிப்பது எனக்கு ஸ்வபாவமாகவும் எளிதாகவுமே இருந்து வந்தது.

தேடித் தேடி ஒன்று கண்டேன். அந்த உண்மை என் கண்களைத் திறந்தது. சத்தியமே தெய்வம் என்பதைக் கண்டேன். சாதாரணமாக தெய்வமே சத்தியம் என்பார்கள். அதை நான் இவ்வாறு மாற்றிக் கொண்டேன். மெய்ம்மையே கடவுள் என்பதை அறிந்தேன். அதைக் கண்ட பின் நான் கடவுளை பிரத்யக்ஷமாகவே கண்டேன் என்றும் சொல்லலாம். என் உடலின் ஒவ்வொரு நரம்பிலும் அவன் ஊடுருவிப் பரந்து நிற்பதை என் உணர்ச்சியில் காண்கிறேன். உணர்ச்சி முழுவதிலும் ஒரு பொருளை உணர்ந்து விட்டால் அது கண்களின் விழியாற் காண்பதை விடக் குறைவில்லை. மணமானது ஐயமறக் கண்டு விட்டால் அதற்கும் பிரத்யக்ஷக் காட்சிக்கும் பேதமில்லை.

[ஹரிஜன் 9—6—42]

அஹிம்சையே என் தெய்வம், சத்தியமே என் தெய்வம், அஹிம்சையை நாடிச் செல்லும்போது, சத்தியம் எனக்குச் சொல்லுகிறது. "என் வழியாகத்தான் அதைக் காண்பாய்" என்று. சத்தியத்தை நாடித் தேடும்போது அஹிம்சை எனக்குச் சொல்லுகிறது, "என் வழியாகச் செல். நீ நாடும் சத்தியத்தைக் காண்பாய்" என்று. இரண்டும் இவ்வாறு ஒன்றுக் கொன்று பிணைந்து நிற்கின்றன. ஒன்றின்றி மற்றொன்றில்லை.

[யங் இந்தியா 4-6-25]

எங்கும் பரவி நிற்கும் மெய்ப்பொருளைக் காண வேண்டுமானால் சிருஷ்டியில் அடங்கிய ஈனப் பிராணிகளையும் தன்னுடையதைப் போல் பேணும் அன்பைப் பெற வேண்டும். இந்த அன்பைத் தன் உள்ளத்தில் காணும் ஒருவன், தெய்வத்தை நேருக்கு நேர் கண்டவன். அந்த நிலையை அடைய ஆசைப்படுகிற ஒருவன் எந்தத் தொழிலையும் வியாபாரத்தையும் இது எனக்குத் தகாது என்று ஒதுக்கிவிட முடியாது. இதனாலேதான் உண்மையை வழிபடுகிற நான் அரசியலில் சம்பந்தப்பட வேண்டியதாயிற்று. கடவுள் வழிபாட்டுக்கும் அரசியலுக்கும் சம்பந்தம் இல்லை, அதுவேறு இதுவேறு என்று சிலர் சொல்லுவார்களே, அதை நான் ஒப்புக் கொள்வதில்லை. இதை நான் மிக அடக்கத்துடன் சொல்லுகிறேன். ஆனால் ஐயமறச் சொல்லுவேன். சமய விசாரத்துக்கும் அரசியலுக்கும் சம்பந்தம் இல்லை என்று சொல்லுவது முற்றிலும் தவறு. கடவுள் விஷயம் சரியாக அறியாதவர்கள் தான் அப்படி வேறுபடுத்துவார்கள்.

[சுய சரிதம்]

மக்களுக்குப் பணி செய்வதில் கடவுளைக் காண நான் முயற்சி செய்து வருகிறேன். ஈசன் மேலே எங்கேயோ வானுலகத்தில் இருக்கிறான் என்றாவது அல்லது கீழே எங்கேயோ பாதாளத்தில் இருக்கிறான் என்று சொல்லுவதாவது மடமை. நாம் அறியும் ஒவ்வொரு உயிரிலும் அவன் இருக்கிறான்.

[சுய சரிதம்]

ராஜாஜி

# வட இந்திய யாத்திரை.2

பஞ்சாபின் அரசியல் சரித்திரத்தைப் படிப்பதற்குள் நேயர்களுக்குப் போதும் போதும் என்றாகி யிருக்கும். பஞ்சாப் அரசியல் எப்படி யிருந்தால் தான் என்ன என்றுகூட நினைக்கத் தோன்றி யிருக்கும். ஆனால் இந்தியாவில் இன்றைய தினம் இந்துக்களும் இந்து மதமும் நிலையாக இருந்து வருவதற்கு ஒரு வகையில் சீக்கியர்கள் பேருதவி புரிந்திருக்கிறார்கள் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.



நம்முடைய தேச விடுதலைப் போராட்டத்திலும் பஞ்சாப் எத்தனையோ தலைவர்களைக் கொடுத்து உதவி யிருக்கிறது. "ஜாலியன்வாலாபாக்" படுகொலை நடந்த இடமே பஞ்சாப் தானே. அதன் பிறகுதான் தேசிய இயக்கம் பலம் பெற்று வளர ஆரம்பித்தது என்பதை நாம் மறந்துவிட முடியுமா! தமிழ் மக்கள் ஆண்டு தோறும் "ஜாலியன் வாலா பாக்" தினத்தைக் கொண்டாடுவதன் மூலம் அரசியல் உணர்ச்சியை மேலும் மேலும் அடைந்து வந்தார்கள் என்று சொன்னால் மிகையாகாது. இப்படிப் பஞ்சாபினால் அரசியல் அறிவையும், தேசிய உணர்ச்சியையும் பெற்று வந்த நாம் பஞ்சாப் அரசியல் எப்படி இருந்தால் என்ன என்று இருந்து விட முடியுமா!

சுதந்திரவிடுதலைப் போராட்டத்துக்கு இந்தக் காலத்தில் பஞ்சாப் உதவியது போலவே பதினேழாவது நூற்றாண்டில் இந்து மதத்துக்கு விரோதமாக நடந்து வந்த மதமாற்றங்களைத் தீவிரமாக எதிர்த்துப் போராடுவதற்கு உதவியது.

***



நங்கல் கால்வாய்க் கரையோரமாக நாம் அனந்தபூர் சாஹிப்புக்குப் பிரயாணம் செய்யும்போது, உண்மையில் ஏதோ ஒரு புது உலகத்துக்குப் போவது போன்ற பிரமை தான் உண்டாகிறது. அவ்வளவு அழகான இயற்கைக் காட்சிகளைப் பஞ்சாபில் வேறு எங்கும் காண முடியாது. நல்ல சிமெண்ட் கான்கிரீட் போட்டது போன்ற மேடு பள்ளம் இல்லாத சாலை. ஒரு புறத்தில் நங்கல் கால்வாய் பஞ்சாபின் வளமான எதிர்காலத்தை எடுத்துச் சொல்லிக் கொண்டு ராணுவ வீரர்கள் நடை பயில்வது போல ஜம்மென்று ஓடுகிறது. மற்றொரு புறத்தில் பசிய மரங்கள்; அல்லது செடிகள். கண்ணுக்கெட்டிய தூரம் ஒரு மாதிரி அதிசய உணர்ச்சியை உண்டாக்கும் பொன் விளையும் பூமி.

இந்தக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டே அனந்தபூர் சாஹிப் வந்தோம். "இதோ அனந்தபூர் சாஹிப்!" என்று வழியில் இருந்த ஒரு ஊரை எங்களுக்குக் காண்பித்தார்கள்.

சட்லஜ் நதி தீரத்தில் ஷிவாலிக் குன்றுகளை ஒட்டிய சமவெளியில் அமைந்துள்ள அனந்தபூர் சாஹிப் பதினேழாவது நூற்றாண்டில் ஒன்பதாவது சீக்கிய மதகுருவான தேஜ் பகதூர் ஸ்தாபித்த சரித்திரப் புகழ் பெற்ற இடம். அந்தக் காலத்தில் காஷ்மீரில் உள்ள பண்டிதர்கள் மதமாற்றக் கொடுமையிலிருந்து தங்களைக் காப்பாற்றி ரட்சிக்க வேண்டும் என்று தேஜ் பகதூரிடம் வந்து வேண்டிக் கொண்டார்கள். பண்டிதர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி அவர்களை எல்லாம் மதமாற்றக் கொடுமையிலிருந்து காப்பாற்றக் கங்கணம் கட்டிக் கொண்டார் தேஜ்பகதூர். தம்முடைய அந்தரங்க சீடர்களில் முக்கியஸ்தரான குரு கோவிந்த சிங்கை அனந்தபூரில் விட்டுவிட்டுத் தேஜ்பகதூர் டில்லிக்குச் சென்றார். அப்பொழுது அரசாண்டு வந்த முகலாய



# இதோ அனந்தபூர் சாகிப்!

மன்னர் தேஜ்பகதூரைப் புகழ் பெற்ற தில்லி சாந்தினி சவுக்கில் கொன்று விட்டார்.

தர்மம் தழைக்கப் பாடுபட்ட உத்தமத் தலைவர் தேஜ்பகதூர், ஆதரவற்றுத் தவித்த காஷ்மீர் பண்டிதர்களின் கண்ணீரைத் துடைக்கச் சென்ற சீக்கிய சிங்கம், இந்து மதத்தைக் காப்பாற்றி, நிலைதடுமாறிக் கொண்டிருந்த இந்திய சுதந்திரத்தைப் பாதுகாக்கத் துணிந்த பாஞ்சால ரத்தினம் தில்லிமா நகரில் அநாதையாகக் கொலை செய்யப்பட்டுவிட்டார். மக்கள் கண்ணீர் விட்டுக் கதறினர்.

இதைக் கேட்ட குருகோவிந்தசிங் அடிதுடித்துப் போனார். இந்துக்களை மதம் மாற்றாமல் இருப்பதற்கும், அதிலிருந்து மக்களைக் காப்பாற்றுவதற்கும் ஒரு திட்டம் போட்டார். அவ்வாறு திட்டம் வகுத்து குருகோவிந்தசிங் வெற்றிகண்ட இடம்தான் அனந்தபூர்.

இந்த இடம் இப்பொழுது கூட சீக்கியர்களின் ஒரு புண்ணிய ஸ்தலமாகத் திகழ்ந்து வருகிறது. சீக்கியர்கள் தங்கள் மத சம்பந்தமான ஊரினுடைய பெயரையோ, மதகுருவின் பெயரையோ மொட்டையாக அழைப்பதில்லை. பெயருடன் கூடவே 'சாகிப்' என்ற வார்த்தையையும் சேர்த்துத்தான் கூப்பிடுகிறார்கள். அதனால்தான் அனந்தபூரை, அனந்தபூர் சாகிப் என்றும், மதகிரந்த நூலை கிரந்த சாகிப் என்றும் பக்தியுடன் அழைக்கிறார்கள். நாமும் அவர்களைப்போலவே அனந்தபூர் சாகிப் என்றே அழைப்போம். அனந்தபூர் சாகிப் பலமுறை மொகலாயர்களின் படையெடுப்புக்கு ஆளாகி அடிமையாகாமல் வெற்றிக் கொடி பிடித்த வீரபூமி. இந்தப் புகழை அந்த ஊருக்கு வாங்கிக் கொடுத்தவர்தான் குருகோவிந்தசிங். அஞ்சாத நெஞ்சம் படைத்த அசகாய சூரர்.

## குரு கோவிந்த சிங்

பதினெட்டாம் நூற்றாண்டு. பஞ்சாப் அமைதி இழந்து இருந்த காலம். எங்கு பார்த்தாலும் மதமாற்றங்களும், எதிரிகளின் ஆக்கிரமிப்பும் நடந்து கொண்டிருந்தன. மக்கள் மத்தியில் வீர உணர்ச்சியையும், தேச பக்தியையும் ஊட்டுவதற்காகக் குருகோவிந்தசிங் அரும்பாடுபட்டு வந்தார். வட இந்தியாவில் வாழும் மக்கள் மத்தியில் மின்னல் போல் பாய்ந்து சென்று பணியாற்றி வந்தார். கதியில்லையே என்று கலங்கி நின்ற மக்களுக்குக் கைகொடுத்து உதவினார். பெண்மணிகளின் கற்பைக் காப்பாற்ற எத்தனையோ அரும்பாடு பட்டார். குழந்தைகளையும், வாலிபர்களையும், முதியவர்களையும், வீரர்களாக, உணர்ச்சி நிறைந்த தியாக புருஷர்களாக மாற்றினார். வட இந்திய மக்கள் குருகோவிந்தசிங்கின்மீது தங்கள் உயிரையே வைத்திருந்தனர்.

இந்தியாவின் எதிர்காலத்தை உருவாக்குவதற்காகப் பஞ்சாபில் உள்ள மக்களை எல்லாம் ஒன்று திரட்டினார். பதினாயிரக்கணக்கான மக்கள் அனந்தபூர் சாகிப்பில் வந்து கூடினர். அங்கு கூடியிருந்த பெரிய கூட்டத்தில் நாட்டுக்கு அப்பொழுது ஏற்பட்டிருந்த அபாயங்களையும், அதை எதிர்த்துப் போராட வேண்



டிய அவசியத்தையும் வற்புறுத்தினார். ஒரு சிறு ஆலயத்தின் முன்னால் மகாசபை கூடியிருந்தது. தமக்குப் பின்னால் இருந்த தேவியின் கோயிலைச் சுட்டிக்காட்டி, "தேவி பராசக்தியின் துணையுடன் காரியத்தை ஆரம்பிக்க வேண்டும். தேவி கேட்கும் பலியைத் தயங்காமல் கொடுக்க வேண்டும்" என்றார்.

அடுத்த கணம் தேவி பராசக்தியின் சன்னதிக்குச் சென்று வருவதாகச் சொல்லி அங்கிருந்து ஆலயத்துக்குள் சென்று விட்டார்.

கூட்டத்தில் ஒரு சலசலப்பு ஏற்பட்டது. "தேவிகேட்கும் பலியைக் கொடுத்துவிடவேண்டியதுதான்" என்று பேசிக் கொண்டனர்.

திடீரென்று குருகோவிந்தசிங் உருவிய வாளை உயர்த்திப் பிடித்துக் கொண்டு மக்கள் முன்னிலையில் ஆவேசத்துடன் வந்து நின்றார். "இந்த நாட்டையும் நாட்டு மக்களையும் காப்பாற்றுவதற்கு அன்னை பராசக்தி நரபலி கேட்கிறாள். இந்தப் பெரிய கூட்டத்தில் யாராவது ஒருத்தர் வாருங்கள். நாட்டின் சுதந்திரத்துக்காகத் தங்களைத் தியாகம்செய்து கொள்ள வாருங்கள்! அவர்களை என் கையினாலேயே அன்னை பராசக்திக்குப் பலியிடப் போகிறேன்" என்றார்.

நாலாயிரம் தொண்டர்கள் நிறைந்த அந்தப் பெரிய கூட்டம் ஒரு கணம் அமைதியாக இருந்தது. கூட்டத்தில் ஒரு ஆள்கூடத் தங்களைத் தியாகம் செய்துகொள்ள முன்வரவில்லை. அன்னையின் பலிக்கு ஆள் கிடைக்கவில்லையே என்று குருகோவிந்த சிங் நினைப்பதற்குள் அந்த மாபெரும் 'கூட்டத்தில்' ஒரு இடத்தில் அமைதி குலைந்தது. ஒரு வாலிபன் கூட்டத்திலிருந்து எழுந்திருந்தான். மலர்ந்த முகத்துடன் குரு கோவிந்த சிங்கின் முன்னால் வந்து நின்று வணங்கினான். "தேவிக்கு என்னைப் பலி கொடுத்து விடுங்கள்" என்றான் தியாக சிம்மன் என்ற அந்த வீர வாலிபன்.

குருகோவிந்த சிங் அவன் தியாகத்தைப் பாராட்டினார். அவனை அழைத்துக் கொண்டு ஆலயத்துக்குள்ளே சென்றார்.

தியாகசிம்மனின் தியாகத்தையும், அஞ்சா நெஞ்சத்தையும், அழியா வீரத்தையும் பற்றி மக்கள் பேசிக் கொள்ள ஆரம்பித்தனர். கூட்டத்தாரின் பாராட்டு மொழிகளுக்கு மத்தியில் குருகோவிந்த சிங்கின் குரல் கணீர் என்று மீண்டும் கேட்டது. எல்லாரும் ஆவலுடன் திரும்பிப் பார்த்தனர்.

குருகோவிந்தசிங் ரத்தம் தோய்ந்த கத்தியுடன் கூட்டத்தாரின் முன் ஆவேசம் வந்தவர் போல் நின்று கொண்டிருந்தார். "தேவிக்கு இன்னொரு ஆள் வேண்டும்" என்றார். கருணை வழியும் அவர் கண்கள் தியாக ஒளி வீசி ஜொலித்துக் கொண்டிருந்தன.

இந்தத் தடவை தர்மசிம்மன் என்ற வாலிபன் தன்னைத் தியாகம் செய்துகொள்ள முன் வந்தான். தர்மசிம்மனையும் ஆலயத்துக்குள் அழைத்துக் கொண்டு சென்றார் குரு.

அன்னை பராசக்திக்கு இரண்டு வீர வாலிபர்கள் பலியிடப்பட்டனர்.

சிறிது நேரத்துக்கெல்லாம் மீண்டும் கூட்டத்தினரின் முன்னிலையில் உதிரம் தோய்ந்த கத்தியை உயர்த்திப் பிடித்த வண்ணம் தோன்றி "இன்னும் ஒரு ஆள் வேண்டும்" என்றார் குரு கோவிந்த சிங்.

குருவின் வேண்டுகோளுக்கு இணங்கி இன்னும் மூன்று வாலிபர்கள் தங்கள் இன்னுயிரைத் தியாகம்செய்து கொள்ள முன் வந்தனர். ஹரிமத் சிம்மன், கௌதம் சிம்மன், சாஹிப் சிம்மன் என்ற மூன்று வாலிபர்களும் முன் சென்ற இருவருடனேயே தேவியின் சன்னதியில் தியாக உலகுக்குச் சென்று விட்டனர்.

தேசத்துக்காக, அப்பொழுது ஏற்பட்டு வந்த கொடிய மதமாற்றங்களைத் தொலைத்து ஒழிப்பதற்காக மிகுந்த மகிழ்ச்சியுடன் தங்களைத் தியாகம் செய்து கொண்ட வீர வாலிபர்களின் புகழ் உலகம் உள்ள மட்டும் நிலைத்து நிற்கும் என்பதில் ஐயமில்லை.

## ஐந்து சீடர்கள்

ஐந்து பலிகளையும் முடித்துக் கொண்டு மலர்ந்த முகத்துடன் குருகோவிந்த சிங் கூட்டத்தின் மத்தியில் மீண்டும் மின்னல் போல் தோன்றினார். "இன்னும் ஒரு ஆள்; தேவியின் அடங்கா தாகத்தைத் தணிக்க முன் வாருங்கள்!" என்றார்.

கூட்டத்தினர் ஒரு கணம் நடுங்கி விட்டனர். வாய் பேச்சு அற்றுவிட்டது போலச் செயலிழந்து உட்கார்ந்து விட்டனர். அந்தப் பெருங் கூட்டத்தின் மௌனத்தைக் கலைத்துக் கொண்டு கலகலவென்று சிரித்தார் கோவிந்த சிங். "தேவிக்கு ஐந்து பேர் போதும்" என்றார். இதைக் கேட்டவுடன் மக்கள் முகத்தில் சாந்தம் நிலவியது.

குருகோவிந்தசிங் கூட்டத்தின் சாந்தத்தைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தார். ரத்தம் தோய்ந்த வாளை எடுத்துக் கொண்டு உள்ளே சென்றார். பலியிட அழைத்துச் சென்ற அந்த ஐந்து வீர வாலிபர்களையும் உயிருடன் அழைத்து வந்து நாலாயிரம் மக்கள் நிறைந்த அந்தப் பேரவையிலே நிறுத்தினார்.

அன்னைக்குப் பலியிட்ட ஐந்து வீர வாலிபர்களையும் உயிருடன் பார்த்த பேரவையில் ஒரு கணம் அமைதி நிலவியது. கண்களை அகல விரித்து மிகுந்த ஆச்சரியத்துடன் அந்த வாலிபர்களைப் பார்த்தனர். தாங்கள் காண்பது கனவுத் தோற்றமோ, மனப் பிரமையோ என்று கண்களைத் துடைத்து விட்டுக்கொண்டு மீண்டும் மீண்டும் பார்த்தனர். "குருகோவிந்த சிங்! வாழ்க!" "ஜய ஜய குருமணி! ஜய குரு கோவிந்த சிங்!" என்று வாழ்த்தினர். தங்களை மறந்து ஆடினர்; வீரமுழக்கம் செய்தனர்.

மக்களின் மகிழ்ச்சியைப் பார்த்துக் குரு கோவிந்தசிங் புன்னகை புரிந்தார். தங்களையே தியாகம் செய்துகொள்ள முன் வந்த ஐந்து உத்தமத் தியாக வாலிபர்களையும் அப்படியே கட்டித் தழுவிக் கொண்டார். கூட்டத்தைப் பார்த்துப் பெரிய குரலில் சொன்னார்:

"வீரப் பெருமக்களே, கேளுங்கள்! தேசத்தையும், அன்னை பராசக்தியையும் ஒன்றாக மதித்து வரும் மக்களே, கேளுங்கள்! உங்கள் இதயம் துடி துடிக்க, நீங்கள் நடுநடுங்கும் படி இந்த ஐந்து வீரர்களையும் அன்னைக்குப் பலியிட அழைத்துச் சென்றது வெறும் பாவனை தான். என் கையாலேயே என் அருமை மக்களின் உயிரைப் பறிப்பேனா! அன்னை பராசக்தி தான் அந்த மாதிரி நர பலியை விரும்புவாளா! உங்கள் இதயம் எந்தத் தியாகத்துக்கும் தயா

# போக்கு வரத்து ஸ்தாபனங்களே!





## டயர்ஸோல்ஸ்
## பரிசீலனை செய்யுமுன்
## தேய்ந்த டயர்களை
## எறிந்துவிடாதீர்கள்

டயர் உற்பத்தியாளர்கள் தற்காலம் தயாரித்துவரும் டயர்கள், மனிதனுடைய சிருஷ்டித் திறமையின் முழுச் சிறப்பும் வெளிப்படும்படி அமைந்தவை. டயரின் டிரெட் பாகம் தேய்வதற்குள் டயரைப் புதுப்பித்துக் கொள்வது தேச நலனுக்கு இன்றியமையாத செயலாகும்.

டயர்ஸோல்ஸ் பொது மக்களிடம் அவர்களுக்குள்ள பொறுப்பை உணர்ந்தவர்கள் ஆதலால் பொதுஜன பாதுகாப்பு விஷயத்தில் சந்தேகமுள்ளதாக கருதப்படும் டயர்களை தயங்காமல் நிராகரித்து விடுவர். இவ்வித நிராகரணத்துக்குக் காரணம் கோணல் புத்தி அல்ல இதனால் பாதகமடையக் கூடிய எல்லா அம்சங்களையும் கருதியே செய்யப்படுகிறது.

டிரெட் பாகம் தேய்ந்தாலும் உறுதியான உறையுடைய டயரை ஒதுக்கிவிடுவது வீண் நஷ்டமுண்டாக்கும். தேய்ந்து மழுமழுப்பான டயர்கள் மதிப்புடையவை. டயருக்கு மேல் டயர்ஸோல்ஸ் டிரெட் பொருத்தப்பட்டு விட்டால் புது டயர் உழைக்கும் காலத்திற்குத் திரும்பவும் உழைக்கிறது. இன்னொரு முக்கிய விஷயம், புதிய டிரெட் பொருத்தப்படும்போது பழைய உறை (கேஸிங்) சேதமாவதில்லை. எனவே டயர்ஸோல்ஸ் டிரெட் தேய்ந்த பிறகுகூட மீண்டும் உபயோகமாகிறது. டயர்ஸோல்ஸ், டயர் பராமரிப்பு பிரச்னைகளை தீர்ப்பதில் ஒவ்வொரு டயர் மைலுக்கும் செலவு மிகக் குறைவு.



**டயர்ஸோல்ஸ்**

ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (தென் இந்தியா) லிட்.

கோயமுத்தூர்

ராக இருக்கிறதா என்பதைத் தெரிந்து கொள்ளவே இந்தப் பயங்கரச் சோதனையைச் செய்தேன். என்னுடைய வாளால் வெட்டியதெல்லாம் ஐந்து ஆடுகள்தான்" என்றார்.

சபையோர் சந்தோஷ ஆரவாரம் செய்தனர். குருகோவிந்த சிங் பாரத சாதிக்கே உயிர் கொடுத்து விட்டார். தருமம் தழைக்க ஆரம்பித்தது. கொடுங்கோலர்கள் நடுநடுங்கினர். சுதந்திர தேவி சிரித்து எழுந்தாள்.

குருகோவிந்த சிங் தான் தேர்ந்தெடுத்த ஐந்து சீடர்களையும் சபையோர் முன் ஒன்றாகச் சேர்த்து நிறுத்தினார். தம்முடைய திருக் கரத்தினாலேயே அவர்களுக்குப் பொன்னுடை போர்த்தினார்; பூமாலை சூட்டினார். அவர்கள் தான் தமக்குப் பின் தலைவர்கள் என்று சபைக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

"பஞ்ச பியாரா" என்று பஞ்சாப் நாட்டில் கூறும் ஐந்து சீடர்களையும் பார்த்துக் குருகோவிந்த சிங் சொன்னார் :

"சீடர்களே! தருமம், கடவுள், சத்தியம், சுதந்திரம் என்பவற்றைப் போற்ற எழுந்திருக்கும் வீர சாதியைச் சேர்ந்தவர்கள் நீங்கள். அநீதியையும். கொடுமையையும் அழித்துவிடும் புனித சாதியைச் சேர்ந்தவர்கள் நீங்கள். இரும்பு மூத்திரையையும், இறுகிய கச்சையையும், கையினில் வாளும் கழற்றிடாத சாதி உங்கள் சீக்கிய சாதி. தாய்த் திருநாட்டைச் சந்ததமும் போற்றிப் புகழோடு வாழுங்கள்" என்று வாழ்த்தினார்.

அந்தக் காலத்தில் சீக்கியர்களுக்குக் குருகோவிந்த சிங் ஏற்படுத்திய இந்தப் புனிதச் சடங்கின் உண்மைத் தத்துவம் இப்பொழுது குன்றி, வெறும் சம்பிரதாயங்களும் சடங்குகளும் மேலோங்கி நிற்கின்றன. இவற்றை நீக்குவதற்கும் குருகோவிந்த சிங் வகுத்த உண்மை நெறியைப் பரப்புவதற்கும் பல சீக்கியத் தலைவர்கள் பாடுபட்டு வருகின்றனர்.

குரு கோவிந்த சிங் இவ்வாறு ஐந்து சீடர்களைத் தேர்ந்தெடுத்த இடம் தான் அனந்தபூர் சாகிப். இந்தத் தேர்ந்தெடுப்பு நடந்த இடத்தில் கேஸ்கட் என்று ஒரு குருத்வாரம் இருக்கிறது. பழைய பஞ்சாபில் உள்ள கலை நுணுக்கம் நிறைந்த எத்தனையோ அருமையான குருத்வாரங்களில் ஒன்று இது.

மேற்கூறிய சம்பிரதாய சீக்கிய மதத்துக்கு அறிகுறியாக விளங்கி வருவதுதான் இந்த அனந்தபூர் சாகிப்பில் உள்ள குருத்வாரம். ஆனால் அங்கு வழங்கும் சம்பிரதாயங்களும் சடங்குகளும் வேடிக்கையாக இருக்கின்றன. சில அம்சங்களில் நம்முடைய கோயில் சம்பிரதாயங்களைவிட ரஸமாகவே இருக்கின்றன.

## அனந்தபூர் குருத்வாரம்

கேஸ்கட் குருத்வாரத்தின் காம்பீர்யமும், அதன் சன்னதியில் ஓங்கி வளர்ந்து நிற்கும் கொடி மரமும் "வாருங்கள்! வாருங்கள்!" என்று நம்மை மௌனமாக அழைக்கின்றன.

கோயிலுக்குள் இப்போது பிரவேசித்து விட்டோம். நம்மைப்போல் வருகிறவர்கள் எல்லாம் என்ன செய்கிறார்கள்! கோயிலுக்கு வெளியிலேயே பாதரட்சைகளைக் கழற்றி வைத்து விடுகிறார்கள். தலையில் தொப்பியோ, அல்லது தலைப்பாகையோ, அதுவும் இல்லாவிட்டால் ஒரு சிறு துண்டைக் கொண்டு மூண்டாசோ கட்டிக் கொள்ளுகிறார்கள். அருகில் இருக்கும் குழாயடிக்குச் சென்று கால் கை கழுவி முகத்தை அலம்பிக்கொண்டு மிகுந்த பக்தியுடன் ஒருவர் பின் ஒருவராகச் செல்லுகிறார்கள். இப்படிச் செல்வதே ஒரு அழகிய காட்சியாக இருக்கிறது.

மலைபோல இருக்கும் உயரமான படிகளை ஏறிக் கடந்து, குருத்வாரத்தின் முன் வாசலைத் தாண்டி உள்ளே செல்லுகிறோம்.

அங்கு கையிலே நீளமான சூலாயுதத்தைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு கம்பீரமான ஒரு சீக்கியர் நிற்கிறார். அவர் நிற்கிற நிலையும், பார்க்கிற பார்வையும் நம்முடைய ஆலயங்களின் வாசலில் அமைந்திருக்கும் துவாரபாலர்களை நமக்கு நினைவூட்டுகின்றன. நம் துவாரபாலர்கள் எல்லாம் சிற்பங்கள். இங்கேயோ உண்மையான சீக்கியரே நிற்கிறார். அவரைப் பார்த்தவுடன் நமக்கும் எங்கிருந்தோ வீர உணர்ச்சி பொங்கிப் பெருகி ஓடி வருகிறது. கூனிக் குறுகி நிற்கும் உடம்பு நேரே நிமிர்ந்து விடுகிறது. வீரர்களைப்போல் வெற்றி நடை போட்டுக்கொண்டு அவரைத் தாண்டிக் கோயிலுக்கு உள்ளே செல்கிறோம்.

பளபளவென்று வெள்ளைப் பளிங்குக் கல்லினால் கட்டப்பட்டிருக்கும் குருத்வாரம் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து மனத்தில் ஒரு பக்தி உணர்ச்சியை எழுப்புகிறது.

நம் ஊர்க் கோயில்களைப் போல பலிபீடம், கொடிமரம், நந்தி, கர்ப்பக்கிருகம், அதைச்சுற்றி உள் பிரகாரம், வெளிப் பிரகாரம் என்றெல்லாம் ஒன்றும் இல்லை. கர்ப்பக்கிருகத்தில் இருக்கும் மூல விக்கிரகம்கூட கிடையாது.

ஒரு அழகான மேடை இருக்கிறது. அந்த மேடையைச் சுற்றிக் கலை மணம் கமழ பலவித வேலைப்பாடுகளுடன் கூடிய தடுப்பு இருக்கிறது. அதற்குள் சீக்கியர்கள் வழிபாட்டுக்குரிய கிரந்தசாகிப்பை வைத்திருக்கிறார்கள். அந்தக் கிரந்தசாகிப் வைத்திருக்கும் சிம்மாசனம் சரித்திர முக்கியம் வாய்ந்த வீர சிம்மாசனம். இந்த நாட்டில் பாரத சாதியை அழியாமல் பாதுகாத்த குரு கோவிந்த சிங் அமர்ந்து இருந்த வெள்ளிசிம்மாசனம் இருக்கிறது. அதில் பட்டு மெத்தை போட்டிருக்கிறது. அந்த மெத்தையில் இரண்டு பக்கங்களிலும் உருண்டையான இரண்டு தலையணைகள் சித்திர விசித்திர வேலைப்பாடுகளுடன் இருக்கின்றன. அதன் மீது சீக்கியர்களின் மத நூலான கிரந்த சாகிப்பை விரித்து வைத்திருக்கிறது. அந்த கிரந்த சாகிப்புக்கு இரு புறத்திலும் வெள்ளிப் பிடி போட்ட இரண்டு வெண் சாமரங்கள் சாத்தி வைத்திருக்கின்றன.

கிரந்த சாகிப்புக்கு அருகில் சீக்கியக் கோயில் பூசாரி அமர்ந்திருக்கிறார். குருத்வாரத்துக்குச் செல்லும் மக்கள் கிரந்த சாகிப்புக்கு மலர் போட்டு விட்டுக் கைகூப்பி வணங்குகிறார்கள். கைகளைக் குவித்து மார்பை நிமிர்த்து சற்றுத் தலையைத் தாழ்த்தி வணங்குவது வீரர்கள் தங்கள் தலைவருக்குச் செய்யும் வீர வணக்கம் போல் அழகாக இருக்கிறது.

பிறகு ஒவ்வொருவராகக் கிரந்த சாகிப்பைச் சுற்றி வலம் வருகிறார்கள். கிரந்த சாகிப்புக்கு

அருகில் அமர்ந்திருக்கும் சீக்கியப் பூசாரி எல்லாரையும் விழித்துப் பார்க்கிறார். பிறகு கிரந்த சாகிப்புக்கு அருகில் உள்ள ஒரு பெட்டியை நாம் கவனிக்கும்படி கூர்ந்து நோக்குகிறார். அந்தப் பெட்டி உண்டிப் பெட்டி. இந்த உண்டிப் பெட்டி மட்டும் எல்லாக் கோயில்களுக்கும் பொதுவான சம்பிரதாயம் போலிருக்கிறது.

அவரவர்களும் சட்டைப் பையில் கையை விட்டுக் காசை எடுத்து அந்தச் சீக்கியப் பூசாரி பார்க்கும்படி உண்டிப் பெட்டியில் போட்டோம். உண்டியில் காசைப் போட்டதும் சீக்கியப் பூசாரியின் முகம் மலர்கிறது. தாடியும், மீசையும்கூடப் புன்முறுவல் பூக்கின்றன. உடனே அங்கு பெரிய சட்டியில் உள்ள கோதுமைக் களியில் கொஞ்சம் எடுத்துப் பிரசாதமாகக் கொடுக்கிறார். கிரந்த சாகிப்புக்கு நைவேத்தியம் செய்த கோதுமைக் களியை பக்தி சிரத்தையுடன் வாயில் போட்டுக் கொண்டோம்.

அந்தக் கோயிலில் ஆண்டுக்கு ஒரு முறை மே மாதத்தில் விசேஷ உற்சவம் நடக்குமாம். அந்த உற்சவத்துக்குப் பஞ்சாபின் பல பாகங்களிலிருந்து ஏராளமான மக்கள் வந்து கூடுவார்களாம். ஆட்டமும் பாட்டமும் பிரமாதமாக இருக்குமாம். கண்டு களிக்க வேண்டிய புனிதத் திருவிழா என்று சொன்னார்கள்.

இந்த விஷயங்களை எங்களுக்குப் பூசாரி விளக்கி விட்டு அங்கு இருந்த இன்னும் சில ஆயுதங்களைப்பற்றியும் சொல்ல ஆரம்பித்தார்.

## நினைவுச் சின்னங்கள்

சீக்கிய மதத் தலைவர்களின் நினைவுச் சின்னங்களாக அவர்கள் உபயோகித்த போர்க் கருவிகள் பல அங்கு இருக்கின்றன. கட்டாரி, வாள், துப்பாக்கி, சூலம் முதலிய ஆயுதங்கள் பளபளவென்று பார்ப்பதற்குப் பயங்கரமாக மின்னிக் கொண்டிருக்கின்றன.

“இவைகளையெல்லாம் பார்த்தீர்களா !” என்றார் அந்தப் பூசாரி.

“பார்த்தோம்” என்றோம்.

கட்டாரியைக் கையில் எடுத்தார். எல்லாருக்கும் மனத்துக்குள் பயம்தான். ஆனாலும் அதை வெளியில் காண்பித்துக் கொள்ளாமல் ஒரு காலை குருத்வாரத்தின் வாசல் பக்கம் வைத்துக் கொண்டே நின்றோம்.

“இந்த வாள் குரு கோவிந்த சிங்கினுடையது” என்றார்.

“குரு கோவிந்த சிங் உபயோகித்த கட்டாரியா! இங்கே கொடுங்கள் பார்க்கலாம்” என்று ஒரு உற்சாகி கேட்டார்.

“நீங்கள் தொடக்கூடாது” என்று மின்னல் வேகத்தில் பதில் வந்தது.

இன்னொரு நீளமான சர்ப்ப சூலம், அதாவது பாம்பு போல் நெளிநெளியாக உள்ள சூலம் ஒன்று இருக்கிறது! அதை எடுத்துக் காண்பித்தார். “இது குரு கோவிந்த சிங்கின் சகோதரர் விசித்திர சிம்மன் மக்களை அழித்த மத யானையை ஒரே குத்தால் குத்திக் கொன்ற சூலாயுதம்” என்றார்.

அந்தச் சூலாயுதத்தை இப்பொழுது நல்ல பலசாலிகள் இரண்டு பேர் சேர்ந்து தூக்கினால்தான் தூக்க முடியும் போலிருக்கிறது. அவ்வளவு கனமும் நீளமும் உள்ளதாக இருக்கிறது. இந்தச் சூலாயுதத்தை ஒரு கையில் லாகவமாகத் தூக்கிப் பிடித்து ஒரே குத்தில் ஆயிரம் ஆள் பலம் நிறைந்த மதயானையைக் கொல்வதாயிருந்தால் அந்த விசித்திர சிம்மன் எத்தனை பலம் நிறைந்தவனாக இருந்திருக்க வேண்டும். ஆஜானுபாகுவான அந்த மனிதனை, குருகோவிந்தசிங்கின் பலத்துடன் ஒப்பிட்டால் தூசிக்குச் சமானம் என்றார்கள். அப்படியானால் குரு கோவிந்த சிங் எப்படிப்பட்ட வீர புருஷராக இருந்திருக்க வேண்டும். அவருடைய கம்பீரமான வீரத் திரு உருவம் ஒரு கணம் கண் முன்னே தோன்றியது. அந்த மகா புருஷருக்குத் தலை வணங்கினோம்.

அவர்கள் எல்லாம் நினைத்திருந்தால் எத்தனையோ வழிகளில் சுக புருஷர்களாக இருந்திருக்கலாம். மகா ராஜாக்களாக வாழ்ந்திருக்கலாம். அவ்வாறு சுயநல ஆசையில்லாமல் மக்களுக்குத் தொண்டாற்றிய அந்த மாணிக்கங்களின் வீரத்தையும் தீரத்தையும் எண்ணி எண்ணி வியந்து போனோம். அவர் தொட்ட ஆயுதங்கள், உபயோகப் படுத்திய கேடயங்கள், உட்கார்ந்திருந்த சிம்மாசனம்எல்லாமே புனிதப் பொருளாக, புண்ணியம் நிறைந்த வீரத் திரு உருவங்களாக அந்த மகா புருஷர்களின் நினைவுச்சின்னங்களாகக் காட்சி தந்தன.

குரு கோவிந்த சிங்குக்கு முதல் முகலாயச் சக்கரவர்த்தி ஆக்ரா தர்பார் மண்டபத்தில் அளித்த ராஜ முத்திரை பதித்த ஒரு வீர வாளும், பெப்சுவில் இருந்து கிடைத்த பெரிய இரட்டைக் குழல் துப்பாக்கியும், அங்கிருந்து ஏழு மைல்களுக்கு அப்பால் குரு கோவிந்த சிங் பூமியை ஒரே குத்தில் குத்தித் தண்ணீர் வரவழைத்த கடப்பாரையும் இருக்கின்றன.

அந்தக் காலத்தில் குரு கோவிந்த சிங் போன்ற தலைவர்கள் தோன்றி இந்து மதத்தை அழியாமல் காப்பாற்றினார்கள். மக்கள் அதைப் போற்றி வணங்கும்படி செய்திருக்கிறார்கள். அனந்தபூர் சாகிபை அவர்கள் தலைநகராகக் கொண்டு அற்புதமான முறையில் தொண்டாற்றியிருக்கிறார்கள். அவர்கள் சீக்கிய மதத்தையும், இந்து மதத்தையும் போற்றி ஆதரித்து வந்தார்கள். அதனால்தான் இத்தனை காலத்துக்குப் பிறகும், எவ்வளவோ மத மாற்றங்களுக்குப் பிறகும், நம்முடைய கோயில்களையும் குருத்வாரங்களையும் அங்கு பார்ப்பது சாத்தியமாயிருக்கிறது.

* * *

அனந்தபூர் சாகிப்புக்குப் பிறகு பஞ்சாபில் பார்க்க வேண்டியது இன்னொன்று இருக்கிறது. அது ரூபாரில் பூமிக்கு அடியில் கிடைத்திருக்கும் சரித்திரப் பிரசித்தி பெற்ற நகரம்தான். நம்முடைய பழங்கால நாகரிகத்தின் சின்னங்கள் அகப்பட்ட மொகஞ்ஜதரோ ஹரப்பா இப்பொழுது பாகிஸ்தான் பகுதியில் இருக்கின்றன. அதே காலத்து நாகரிகத்தைச் சேர்ந்த நகரம் ஒன்றை நமது புதை—பொருள் இலாகா ஆராய்ச்சியாளர்கள் ரூபாரில் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இருந்த நம்முடைய உயர்ந்த நாகரிகத்தின் சிறப்பை விளக்கும் அந்த அதிசய நகரத்தை அடுத்த இதழில் காண்போம். (தொடரும்)

# குழந்தைக்கு எப்பொழுது

# டுமெக்ஸ்

## பால் உணவைக் கொடுக்க

## ஆரம்பிக்க வேண்டும்?

தாய்ப் பால் குறைந்து புட்டிப்பால் கொடுக்க நேரிடும் போது மட்டுமே யன்றி இதற்கு முன்பு இல்லை. விளம்பரங்களில் என்ன சொல்லப்பட்ட போதிலும் குழந்தைக்குத் தாய்ப்பாலைப் போல் வேறு எதுவும் ஆகாது. தாய்ப்பாலுக்கு அடுத்ததாக டுமெக்ஸ் பால் உணவே மிகவும் நல்லது என்று நீங்கள் சந்தேகமின்றி கொடுக்கலாம். குழந்தைக்கு புட்டிப்பால் கொடுக்க அவசியம் ஏற்படும் போது டுமெக்ஸ் பால் உணவையே கொடுக்க ஆரம்பியுங்கள். இது நிர்பயமானது. போஷாக்கு அளிக்க வல்லது. உங்கள் பணத்திற்கு முழு பொருமானம். ஆகவே எப்போதும் டுமெக்ஸ்ஸையே வாங்குங்கள்.

**டுமெக்ஸ்**
**பால் உணவு**

**உங்கள் குழந்தைகளுக்கு டுமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களின் வளர்ச்சியைக்கவனியுங்கள்**

# ஆற்றங்கரையினிலே




பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை

## 48. திருக்கோவலூர் (தொடர்ச்சி)

"மனவிரி உண்டானால் இடவிரி உண்டு" என்பது தென்னாட்டில் வழங்கும் ஒரு பழமொழி. 'மனம் இடம் கொடுத்தால் மனை இடம் கொடுக்கும்' என்பது இதன் கருத்து. இந்த உண்மையை விளக்கிக் காட்டியது திருக்கோவலூர் நகரம்.

ஒருநாள் மாலைப் பொழுதில் அந்நகர வீதியிலே நடந்து கொண்டிருந்தார் ஒரு பெரியார். அப்போது வானம் இருண்டது; கருமேகம் திரண்டது. "அந்தி மழை அழுதாலும் விடாதே" என்று எண்ணி அருகே யிருந்த வீட்டில் ஒதுங்கினார் அப் பெரியார். "இரவில் படுத்துக் கொள்ள இடம் வேண்டும்" என்று வீட்டுக்கு உரியவரை நோக்கி விண்ணப்பம் செய்தார். அவர், அவ் வீட்டின் இடைகழியை ஒழித்துக் கொடுத்து "இங்கே ஒருவர் படுத்துக் கொள்ளலாம்" என்று சொல்லி உள்ளே சென்று விட்டார்.

மழை வலுத்தது; காற்றும் சேர்ந்து அடித்தது. இடை கழியில் இருள் செறிந்தது. அப்போது ஒருவர் வாசலில் ஓடி வந்து நின்றார். "இங்கே கொஞ்சம் இளைப்பாற இடம் கிடைக்குமா?" என்று கூவினார். அக்குரல் கேட்டவுடன் உள்ளே படுத்திருந்தவர் எழுந்திருந்து "இங்கே ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்" என்று சொல்லி வந்தவர்க்கு இடம் கொடுத்தார்.

இருவரும் நனைந்த உடையோடு நடுங்கிக் கொண்டிருக்கையில் இன்னொருவர் ஓடி வந்து அங்கு இடம் வேண்டும் என்று கேட்டார். விசால மனமுடையார் இருவரும் அவரையும் வருக என்று அழைத்து "இங்கே ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்" என்று சொல்லி எழுந்து நின்று இடம் கொடுத்தார்கள்.

> "இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
> கடனறி காட்சி யவர்"

என்ற தமிழ் மறைக்கு ஓர் எடுத்துக் காட்டாக நின்ற அப் பெரியார்க்கு இறைவன் இடைகழியில் காட்சியளித்தான் என்ற பழைய வரலாறு ஒன்று கூறுகின்றது.

இவ்வாறு இடைகழியில் இறைவனைக் காணும் பேறு பெற்ற பெரியார்களில் ஒருவர் காஞ்சி நகரத்தார்; மற்றொருவர் மாமல்லபுரத்தார்; இன்னொருவர் திருமயிலையார். முதல் ஆழ்வார்கள் என்று போற்றப் பெறுபவர் இவரே. ஒத்த உணர்ச்சியுடைய இம் மூவரும் மழைக்காக ஒதுங்கி நின்று பாடும் பெருமைபெற்ற திருக்கோவலூரையும் அவ்வூரைத் தலைநகராகவுடைய பெண்ணை நாட்டையும் புகழ்ந்து பாடினார் ஒரு கவிஞர்.

> "பாவரும் தமிழால் பேர்பெறு பனுவற்
> பாவலர் பாதிநாள் இரவில்
> மூவரும் நெருக்கி மொழிவிளக் கேற்றி
> முகுந்தனைத் தொழுத நன்னாடு"
>
> (பனுவல் - நூல்; முகுந்தன் - திருமால்)

என்பது அவர் திருவாக்கு.

பெண்ணை யாற்றின் தென்கரையில் கோயில் கொண்டுள்ள திருமாலைக் கண்குளிரக் கண்டு வணங்கினார் திருமங்கை மன்னன்.

"துஞ்சா நீர் வளஞ்சுரக்கும் பெண்ணைத்
தென்பால்
தூயநான் மறையாளர் சோமுச் செய்ய
செஞ்சாலி விளைவயலுள் திகழ்ந்து தோன்றும்
திருக்கோவ லூரதனுள் கண்டேன் நானே"

(சோமு - வேள்வி)

என்பது அவர் அருளிய அருமைத் திருப்பாசுரம்.

நல்லோர் பலர் திருக்கோவலூரை நாடி வந்தனர். அன்னவருள் ஒருவர் பொய்யறியாப் புலவர் பெருமானாகிய கபிலர். பாரி வள்ளலின் ஆருயிர்த் தோழராகிய இப் புலவர் அவனது பறம்பு மலையிலே பெரும்பாலும் தங்கி இருந்தார். குறுநில மன்னனாகிய பாரியின் கொடைத் திறம் அவர் உள்ளத்தை அள்ளிக் கொண்டது.

"முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்"

என்று தனக்குரிய நாடு முழுவதையும் நன்கொடையாக வறியார்க்கு வழங்கிய பாரியின் பெருந்தகைமையை அவர் வியந்து பாடினார். இத்தகைய வள்ளலைத் தமிழ் மன்னர் மூவரும் சேர்ந்து வஞ்சித்துக் கொன்றபோது ஆறாத் துயரம் அடைந்தது கபிலரது நெஞ்சம். அந்நிலையில் பாரியின் பெண் மக்கள் இருவரும் அவரைத் தஞ்சம் அடைந்தனர். செஞ்சொற் கவி பாடும் திறம் படைத்த அந் நங்கையர் பண்ணன் வாழ்ந்த பறம்பு மலையை நோக்கி,

"அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்
எந்தையும் உடையேம் எம் குன்றும்
பிறர் கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்
வென்றெறி முரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார் யாம் எந்தையும்
இலமே"

என்று பரிந்து பாடிய பொழுது கபிலர் கண்ணீர் வடித்துக் கரைந்து உருகினார். மனங் கலங்கி நின்ற மங்கையர் இருவரையும் தகைசான்ற தலைவர்க்கு மணஞ்செய்து கொடுத்தல் தமது கடமை என்று கருதி அவரை அழைத்துக் கொண்டு பறம்புமலையினின்றும் புறப்பட்டார். குறுநில மன்னனாகிய விச்சிக்கோனிடம் போந்து,

"அடங்கா மன்னரை அடக்கும்
மடங்கா விளையுள் நாடுகிழ வோயே
களங் கொண்டு கனலும் கடுங்கண் யானை
விளங்குமணிக் கொடும்பூண் விச்சிக்கோவே!

இம் மங்கையர் முல்லைக் கொடி படர்வதற்குத் தேர் அளித்த பாரி வள்ளலின் மக்கள். இவரை மணந்து கொள்க" என்று வேண்டினார். ஆயினும் விச்சிக் கோன் அவர் கருத்திற்கு இசைந்தானில்லை. அதனால் ஊக்கம் குன்றாத புலவர் பெருமான் இருங்கோவேள் என்னும் சிற்றரசனிடம் இருவரையும் அழைத்துச் சென்றார். அம்மங்கையர் யார் என அறிய ஆவலுற்ற அம் மன்னனை நோக்கி,

"இவர்யார் என்குவை யாயின் இவரே
ஊருடன் இரவலர்க்கு அருளித் தேருடன்
முல்லைக்கு ஈத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பின் கோமான்
நெடுமாப் பாரி மகளிர்.

யான் இவர் தந்தையாய பாரியின் தோழன். அந்த முறையில் இவர் என் மக்கள். இவரை வாழ்க்கைத் துணையாக ஏற்றுக் கொள்க" என்று வேண்டினார். பெருங்குடிப் பிறந்த இருங்கோவேளும் அதற்கு இணங்கினானில்லை.

"முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்" என்னும் முதுமொழியை நம்பிய கபிலர் திருக்கோவலூரை நாடினார். வள்ளலாகிய திருமுடிக்காரியின் வழி வந்த குறுநில மன்னன் ஆட்சி புரிந்த அந்நகரில் தம் கருத்து நிறைவேறும் என்று எண்ணினார். அவர் எண்ணிய வண்ணமே பாரியின் பெண்களை ஏற்றுக் கொள்ள இசைந்தது காரியின் பெருங் குலம். அக்குலத்தைச் சேர்ந்த இருவர்க்குப் பாரி மகளிர் இருவரையும் மணம் செய்து கொடுத்தார் கபிலர். கடமை தீர்ந்தது என்று கவலை துறந்தார்.

ஆயினும் பாரியை இழந்த துயரை அவர் மறந்தாரல்லர். பகலவன் இல்லாத வானம் போல் ஒளி மழுங்கி இருந்தது பாரி இல்லாத தமிழகம். ஒருநாள், பெண்ணையாற்றின் கரையில் அமர்ந்து பாரி மன்னன் செய்த நன்மையெல்லாம் எண்ணினார்; பெருந் துயரில் மூழ்கினார்; என்றும் மறக்க முடியாத துயரத்தை மாற்றும் வழி யொன்று கண்டார். புனிதமாய பெண்ணையாற்றில் நின்ற பாறையில் நெருப்பை வளர்த்தார். வள்ளல் பாரியை உள்ளத்தில் வைத்து அந் நெருப்பிலே பாய்ந்து உயிர் நீத்தார். திருக்கோவலூரில் உள்ள கல்லும் இச்செய்தி சொல்லும்.

"வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
தென்கரை உள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலும் முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்
மூரிவண் தடக்கைப் பாரிதன் அடைக்கலப்
பெண்ணை மலையர்க்கு உதவி......
மினல்புகும் விசும்பின் வீடுபேறு எண்ணிக்
கனல் புகும் கபிலக் கல்" *

என்பது அக் கல் சொல்லும் கவி.

* பாரி மகளிரின் திருமணத்தைப் பற்றியும், கபிலரது மரணத்தைப் பற்றியும் வேறு விதமாகச் சொல்லும் நூல்களும் உண்டு.




## அத்தியாயம் 15

# அன்பெனும் தேன்

நாங்கள் எதிர்பார்த்தபடி ஈசுவர மூர்த்தி ஒன்றும் செய்யவில்லை. அவர் என்ன செய்தார், செய்யவில்லை என்பது எனக்குத் தெரியாது. என்னை ஒன்றும் செய்யவில்லை. அன்றையக் கலாட்டாவில் சம்பந்தப்பட்டிருந்த மாணவன் ஒருவன் அன்று மாலை ஈசுவர மூர்த்தியின் வீடு பூட்டியிருக்கிறதென்று செய்தி கொண்டு வந்தான்.

அதைக் கேட்ட தமிழ் வாத்தியார் என்னிடம், "இவ்விவரத்தை வெளியிட்டால் உன்னை விசாரிப்பார்கள். நீ நடந்ததைச் சொல்லி விடுவாய் என்று பயந்து கொண்டு கலாட்டா செய்யவில்லை. ஈசுவரமூர்த்தி யாரையும் கண்டு அஞ்சமாட்டான். ஆனால் மறுபடியும் இந்த மாதிரி இக்கட்டான நிலையில் அகப்பட்டுக் கொள்ள அவனுக்கு விருப்பமில்லை போலிருக்கிறது" என்றார்.

நாங்கள் எதிர்பார்த்த செய்தி வருவதற்கு ரொம்ப நாட்களாகவில்லை. என் அன்னையின் மௌனமான வேதனை மறுநாள் தீர்ந்தது. சிறை அதிகாரி "தப்பிச் செல்ல முயன்ற கந்தசாமி குண்டுக் காயங்களால் அடிபட்டு இறந்து விட்டார்" என்று தந்தி அடித்திருந்தார். ஏற்கனவேயே எதிர்பார்த்திருந்த தந்தியானாலும் என்னையும் அது ஒரு கலக்குக் கலக்கி விட்டது.

அப்பா கடையில் பிரியமாக இருந்ததெல்லாம் படம் படமாகக் கண் முன்னால் வந்து நின்றது. அவருடைய குற்றங்களெல்லாம் மறைந்து குணங்கள் மட்டுமே என் நினைவுக்கு வந்து நின்றன. மரணம் எப்பேர்ப்பட்டவர்களையும் நல்லவர்களாக்கி விடுகிறது!

என் அன்னையின் துயரத்தைப் பற்றிச் சொல்லி முடியாது. ஆகையால் அதையெல்லாம் விட்டு விடுகிறேன். ஊரார் துக்கம் விசாரிப்பதெல்லாம் ஓய்ந்த பிறகு நான் சென்னைக்குப் போவதைப் பற்றிப் பேச ஆரம்பித்தேன்.

என் அன்னை ஒரே போடாகப் போட்டு விட்டார். "துரை! இந்த இடத்தை விட்டு நாம் எங்கும் போக வேண்டாம். அப்பா இருந்த இடத்திலேயே நான் மீதிக் காலத்தையும் கழித்து விடுகிறேன். வேறே எங்கே போனாலும்

என் மனத்துக்குச் சாந்தி கிட்டாது!" என்று கூறி விட்டார்.

அந்தச் சமயத்தில் வாத்தியார் ஐயா எவ்வளவு ஆதரவுடன் நடந்து கொண்டார் என்பதைக் குறிப்பிட வேண்டும். நான் அவரிடம் மறுபடியும் இதைப் பற்றிச் சொன்ன போது பொறுமையாகப் பதில் சொன்னார்.

"துரை! அந்த மனிதர் மிக நல்லவராகவே இருக்கலாம். உண்மையிலேயே உன் தந்தைக்கு அளித்த வாக்குறுதியைக் காக்க விரும்பலாம். ஆனால் ஏதோ ஒரு உத்வேகத்தில் எழுந்த எண்ணமானால் நான்பட நிலைக்காது. பின்னால் உன் கதி என்னவாகும் என்பதை யோசிக்க வேண்டும். ஊர் பேர் தெரியாத ஒரு மனிதருடன் நீ உடனே புறப்பட்டுப் போய் விடலாமா? அவர் மறுபடியும் வரும்போது என்னைக் கட்டாயம் பார்த்துப் பேசச் சொல். அதன் பிறகு உன்னை அனுப்பலாம் என்று எனக்குத் தோன்றினால் நானே அனுப்பி வைக்கிறேன். நீ கவலைப்படாதே" என்றார்.

எனக்கு நான் சென்னை நகரம் சென்று மேல்படிப்புப் படிக்கவேண்டும் என்ற ஆசை உள்ளத்தில் அழுந்தி விட்டது. அல்லிக் குளத்திலேயே இருந்தால் அந்த வாய்ப்பு எங்கே கிடைக்கும்? இந்தப் புதிய மனிதரின் உதவியால் அது சாத்தியமாகக் கூடுமானால் அந்த உதவியை நான் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்று நினைத்தேன். இதையெல்லாம் விவரித்து வாத்தியாரையாவிடம் சொல்லும் துணிவு எனக்கு இருக்கவில்லை.

என் ஆசை நிறைவேறுவதற்கு-உரிய வழிகளை யெல்லாம் இறைவன் எப்படியோ செய்து கொடுத்தார். நமது ஆசைகள் சில சமயங்களில் நிறைவேறவும்தான் செய்கின்றன. சில சமயங்களில் நாம் மிக ஆர்வத்துடன் கட்டும் கோட்டைகள் தகர்ந்தும் போய்விடுகின்றன. அதுவும் ஒரு விசித்திரம்தான்.

ஒரு மாத காலம் உருண்டோடிச் சென்றது. நாட்கள் ஓடும் வேகத்தை நம்மால் புரிந்து கொள்ளவே முடிவதில்லை. சில அபூர்வமான சந்தர்ப்பங்களில் கழுத்தைப் பிடித்துத் தள்ளினாலும் பொழுது போகாமல் பிராணனை வாங்குகிறது. சில சந்தர்ப்பங்களில் 'இவ்வளவு நாளாகி விட்டதா?' என்று நம்மைத் திகைக்க வைக்கிறது.

நான் இந்துவை முதல் தடவை சந்தித்து ஏழெட்டு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது என்பதை எண்ணும்





போது ஒரே வியப்பாக இருக்கிறது. அந்தக் காட்சி என் உள்ளத்தில் இன்னும் பசுமையாகப் பதிந்திருப்பதால், நேற்று நடந்த சம்பவம் மாதிரியே தோன்றுகிறது.

இந்துவை முதன் முதலில் காரிலிருந்து பார்த்தபோதே "என்ன களையான முகம்!" என்று நினைத்தேன். அதன் பிறகு அவளைப் பாதிரித் தோட்டத்தின் மத்தியில் அழகுப் பிம்பமாகக் கண்டேன். அவளுடைய களங்கமற்ற வதனத்தில் என்னைப் பார்த்தவுடனே ஒரு பிரகாசம் மின்னலைப் போலத் தோன்றியது. அதைக் கண்டு நான் மிகவும் வியந்தேன்.

'என்னைப் பார்த்தவுடனே இந்தப் பெண்ணின் முகத்தில் இப்படி ஒரு மாறுதல் ஏற்படுவானேன்?' என்று மனத்துக்குள் நினைத்தேன்.

அதற்குப் பின் அவள் செய்த காரியங்கள் என் மனத்தில் எழுந்த கேள்விக்கு விடை கூறின. அவள் புன்னை மரத்தடியில் சென்று நிற்காமல் போயிருந்திருக்கலாம் அல்லவா? நின்றது மல்லாமல் புஷ்பங்கள் பொறுக்குவது போல் பாவனை செய்தாள். அது பாவனை என்பது முக பாவத்திலிருந்தே விளங்கியது. பூக்களைத் தன் மலர்க் கரங்களால் எடுத்துக் கொண்டே நான் இருந்த இடத்தைப் பார்த்தாள். அதற்குள் நான் ஒதுங்கிச் சற்று மறைவாக நின்று கொண்டு அவளைக் கவனித்துக் கொண்டிருந்தேன். என்னைக் காணவில்லை என்று தெரிந்தவுடன் அவள் முகத்தில் அத்தனை ஏமாற்றமும் துயரமும் தென்படுவானேன்? அவளுடைய ஏமாற்றமடைந்த முகம் எனக்கு அவ்வளவு மகிழ்ச்சி யளிப்பானேன்?

இந்துவின் முகம் உண்மையிலேயே கண்ணாடி போன்றது. அழகிலும் சரி. உணர்ச்சிகளைப் பிரதிபலிப்பதிலும் சரி. வள்ளுவரின் வாக்கு அவள் விஷயத்தில் நூற்றுக்கு நூறு பொருந்தும். நெஞ்சத்தின் கடுப்பு மட்டும் அல்ல. எந்தவிதமான உணர்ச்சியாக இருந்தாலும் அந்த முகம் தெளிவாகக் காட்டி விடும். கண்களின் மாறுதல்களிலும், கன்னங்களின் குழிவுகளிலும், புருவங்களின் நெளிவுகளிலும்' இதழ்களின் துடிப்புகளிலும் அவளுடைய மனத்தில் இருப்பதைப் படித்து விடலாம். அவள் வாயைத் திறந்து பேச வேண்டியதே இல்லை. தன் மன உணர்ச்சிகளை மறைத்து மறைத்து வாழ வேண்டிய அவசியமில்லாத, புனிதமான சூழ்நிலையில் வளர்ந்திருந்தபடியால் அவள் உணர்ச்சிகளைப் பொழியும் அற்புத சித்திரமாக விளங்கினாள். தன் மனத்தில் எழுந்த எண்ணங்களையெல்லாம் மறைத்தே அறியாத பச்சிளங் குழந்தையைப் போன்ற கபடமற்ற உள்ளமுடையவளாக இருந்தாள் இந்துமதி. அந்த நிஷ்களங்கமான மனத்தில் முதன் முதலில் அன்பு என்னும் தாமரைக் கொடி படர ஆரம்பித்ததை நான் என் கண்களால் கண்டேன்.

அவளுடைய மனமாகிய நிச்சலனமான தடாகத்தில் ஒரு அழகிய தாமரை மலர் பூத்தது. அந்த அன்பு மலரில் இன்பத் தேன் பருக ஒரு தேனீ வந்தது. அந்தத் தேனீயைக் கண்டு தாமரை அதிகம் மகிழ்ந்ததா? அல்லது மதுவின் சுவையைக் கண்டு தேனீ அதிகம் மகிழ்ந்ததா என்று யாரால் சொல்ல முடியும்? ஆனால் அந்தத் தேனீ தன் கூண்டுக்குச் சென்று விட்டபோது மலர் மிக வேதனைப்பட்டது. ஆனால் தேனீ மட்டும் மிக வேதனைப்படவில்லையா? அதற்கு எங்கு சென்றாலும் தாமரை மலரை மறக்க முடியவில்லை. எவ்வளவு உயரப் பறந்த போதிலும் மறுபடியும் தாமரை மலரின் மென்மையான இதழ்களில்



தவழ்ந்து அதன் மிருதுவான ஸ்பரிசத்தை அனுபவிக்க வேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டேதான் இருந்தது. அன்பின் மென்மையை மட்டும் அனுபவிக்கத் தெரிந்து கொண்டு விட்டால், அதைவிட இன்பந் தரக்கூடிய பொருள் மூவுலகத்திலும் இருக்கமுடியாதென்று சத்தியம் செய்யத் தோன்றும்.

இந்துவின் அன்பைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் அதற்கு முடிவே கிடையாது. அவளுடைய அன்பு எப்படி மாறவில்லையோ அதேமாதிரி அவளுடைய குணங்கள் எதுவும் இன்றுவரை மாறவில்லை. உடல்தான் வாடிப் போயிருக்கிறதே தவிர, அவள் உள்ளம் முதன் முதலில் நான் பார்த்தபோது எப்படிப் பளிங்குபோல் இருந்ததோ அதேமாதிரி இன்னமும் இருக்கிறது.

அந்தக் கபடமற்ற சிரிப்பும், நேரான பார்வையும் அதைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன.

என் இந்துவின் பார்வை சூரியனின் பிரகாசத்தைப் போன்றது. ஒரே மாதிரியான பிரகாசம். மின்னலைப் போல் ஒரு கணம் உலகத்தை ஒளி வெள்ளத்தில் மூழ்கடித்து விட்டு, அடுத்த கணம் பயங்கரமான இருளில் தள்ளும் பிரகாசமல்ல. அந்த ஒளியில் பார்த்தால் உள்ளத்தில் இருப்பதெல்லாம் தெளிவாகத் தெரியும். அந்தத் தெளிவை மின்னலின் ஒளியில் பெற முடியுமா? அவளுடைய நேரான பார்வையில் மற்றவர்களுடைய உள்ளத்துக்கு வெளிச்சம் போடும் தன்மை இயல்பாகவே அமைந்திருக்கிறது. இந்துவைப் பார்த்த உடனேயே பலருக்குத் தன் குற்றங் குறைகளை உணரச் சக்தி ஏற்பட்டு விடுகிறது. அவளுடைய தூய்மையான உள்ளத்தில் எழும் ஒளிக்கு இந்தச் சக்தி உண்டாவது அதிசயமில்லை போலும்!

இந்துவின் அருமைகளைப் பற்றி நான் எழுதத் தொடங்கினால் எங்கே நிறுத்துவது என்றே தெரியவில்லை. தோன்றிக் கொண்டிருப்பதையெல்லாம் எழுதிக் கொண்டே இருக்க வேண்டும்போலிருக்கிறது. ஆனால் நான் கதையைத் தொடர்ந்து, சீக்கிரம் எழுதிக் கொடுக்க வேண்டுமே! இதை நான் எழுதி இந்து படிக்க முடியாமல் போய் விடக்கூடாதல்லவா?

## அத்தியாயம் 16

# தந்தையின் கடிதம்

நாட்கள் உருண்டோடின என்று ஆரம்பித்தேன். ஒரு மாதத்துக்குப் பின்னர் ஒருநாள் நான் பள்ளிக்கூடம் போய்க் கொண்டிருந்தேன். நான் இலுப்பமரத் தோப்பைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்தபோது யாரோ என்னைக் கூப்பிடுவது போலத் தோன்றியது. சற்று நின்று சுற்று முற்றும் பார்த்தேன். பிறகு பிரமை என்று நினைத்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தேன்.

மறுபடியும், "ரங்கதுரை!" என்று குரல் கேட்டது. இந்தத்தடவை குரல் இலுப்ப மரத் தோப்பிலிருந்து வருகிறது என்று தெளிவாகத் தெரிந்தது. என் மனம் சந்தோஷத்தால் துள்ளியது. தோப்புக்குள் புகுந்து வேகமாகச் சென்றேன்.

தோப்பில் பத்து கஜ தூரம் சென்றதும் ஒரு மரத்தின் மறைவிலிருந்து ஒரு மனிதர் வெளிப்பட்டார். இரண்டே எட்டில் என் அருகில் வந்து என்னைத் தழுவிக் கொண்டார். அந்த மாதிரி யாரும் என்னிடம் அன்பு காட்டி அது வரை நான் அறிந்ததில்லை. அந்தக் கணத்தில் எனக்கும் அவர்மீது அளவில்லாத பிரியம் உண்டாயிற்று. அவர் என்ன சொன்னாலும் செய்வதற்கு நான் சித்தமாகி விட்டேன்.

"துரை! எனக்கு ஒருபெண் குழந்தை இருக்கிறாள். அவளை ஒரு வீரப் பெண்ணாக வளர்க்க வேண்டுமென்பது என் ஆசை. ஆனால் அவளை நான் பார்க்கவே முடியவில்லை. உன்னைப் பார்க்கும்போது எனக்கு அவளுடைய ஞாபகம் வருகிறது. அவளைப் போய்ப் பார்க்கவேண்டும்போல ஆசையாக இருக்கிறது" என்று கூறினார்.

உடனேயே, "அது கிடக்கட்டும், துரை! உன்னை யாராவது ஏதேனும் விசாரித்தார்களா? சங்கர மூர்த்தி வீட்டில் என்ன நடந்தது என்று யாரும் கேட்கவில்லையா?" என்று கேட்டார்.

"என் அம்மாவிடமும், தமிழ் வாத்தியாரிடமும் தான் இதைப் பற்றிச் சொன்னேன். வேறு யாரும் இதைப் பற்றி என்னிடம் கேட்கவும் இல்லை. நான் சொல்லவும் இல்லை. சங்கர மூர்த்தியும் இந்த ஊரில் இல்லை."

"ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. அவன் ஏதாவது ரகளை செய்வான் என்று எதிர்பார்த்தேன். ஆமாம்! உன் அம்மாவிடம் நான் சொன்னதை

யெல்லாம் சொன்னுயா? சென்னைக்குப் போகத் தயார்தானே?''

"அம்மா இதற்கு இலேசில் சம்மதிக்க மாட்டா ரென்று தோன்றுகிறது. நீங்கள் பேசி, அப்பாவைப் பற்றிச் சொன்னுல்தான் நம்புவார் போலிருக்கிறது. நீங்கள் நேரில்வந்து பேசினுல் நல்லது.''

"அப்படியானுல் சரி! நான் இன்று மாலை ஏழு மணிக்கு உங்கள் வீட்டுக்கு வருகிறேன். உன் வாத்தியாரிடமும் பேசுகிறேன். அவரையும் வீட்டில் இருக்கச் சொல்லு. என்னுடன் பேசினுல் அவர்கள் சம்மதித்து விடுவார்கள்!''

"சரி! கட்டாயம் ஏழு மணிக்கு வந்து விடுங்கள். நான் இப்போதே வாத்தியாரய்யாவிடம் சொல்லி விடுகிறேன். மணியாகி விட்டது. நான் வரட்டுமா?'' என்று விடைபெற்றுக் கொண்டு பள்ளிக்கூடம் சென்றேன்.

அன்று எனக்குப் பள்ளிக்கூடத்தில் இருப்புக் கொள்ளவே இல்லை. எந்தப் பாடமும் புரியவில்லை. தமிழ் வாத்தியாரைத் தனியாகக் கண்டு இதைச் சொல்வதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது. அன்றைய தினம் அவர் தலைமை உபாத்தியாயர் அறையில் இருந்து வெகு நேரம் வெளியே வரவில்லை. கடைசியாக அவரைப் பார்த்து விஷயத்தைச் சொன்னதும் அவர் வருவதாக ஒப்புக் கொண்டார். பின்னர் மணி எப்பொழுது அடிக்கும் என்று காத்துக் கொண்டே இருந்தேன். மணி அடித்த உடனே வீட்டுக்குச் சிட்டாய்ப் பறந்தேன். அம்மாவிடம் விஷயத்தைச் சொல்லி வரவேற்புக்கு ஏற்பாடுகள் செய்தேன்.



தமிழ் வாத்தியாரும் மாலை ஆறு மணிக்கு வந்து சேர்ந்தார். நேரமாக ஆக என் பரபரப்பு உச்சியை அடைந்தது. சரியாக மணி ஏழானதும் வாசற் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. நான் ஓடிப்போய்க் கதவைத்திறந்தேன். உள்ளே வந்தவரைக் கண்டதும் எனக்கு ஒரே அதிசயமாகப் போய் விட்டது. காலையில் நான் பார்த்த மனிதர், மீசையும் மூண்டாசுமாகக் காட்சியளித்தார். இப்போது அந்த விந்தை மனிதர் தூய வெள்ளை வேஷ்டியும், ஜிப்பாவும் அணிந்தவராய் ஒரு பட்டண வாசியைப் போலத் தோற்றம் அளித்தார். அவரைப் பார்க்கும்போது ஒரு நாகரிகமான படித்த இளைஞரைப் போலத் தோன்றியது. அவருடைய கண்களைப் பார்க்கும்போதுதான் அவர் அதே மனிதர்தான் என்ற நிச்சயம் எனக்கு உண்டாயிற்று.

தமிழ் வாத்தியாரும் அப்படிப்பட்ட ஒருவரை எதிர்பார்க்கவில்லை என்பது அவர் எழுந்து நின்றதிலிருந்து நன்ருகத் தெரிய வந்தது.

"வாருங்கள்'' என்ருர் தமிழ் வாத்தியார்.

"நமஸ்காரம்'' என்று கைகளைக் கூப்பினுர் அந்தப் புதிய மனிதர்.

அவர்கள் நான் விரித்திருந்த ஜமக்காளத்தில் அமர்ந்ததும், தமிழ் வாத்தியார் என்னைப் பார்த்து, "ரங்கதுரை! நீ என்னுடைய வீட்டுக்குப் போய் என் மூக்குக் கண்ணுடியை எடுத்துக் கொண்டு வா. கொண்டு வர மறந்து விட்டேன்'' என்று கூறினுர். எனக்கு அங்கிருந்து போகவே மனம் வரவில்லை. தமிழ் வாத்தியார் மீதே கோபம் வந்தது. ஆனுலும் சொன்னதைச் செய்துதானே ஆகவேண்டும். அதற்காக விழுந்தடித்துக் கொண்டு வாத்தியார் வீட்டுக்கு வேகமாக ஓடினேன்.

நான் திரும்பி வரும் வரை அவர்கள்என்ன பேசிக் கொண்டிருந்தார்களோ தெரியாது. நான் திரும்பி வந்தவுடன் வாத்தியாரின் முகம் சந்தோஷமாக இருப்பதைப்பார்த்தேன். இருவரும் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

என்னைப் பார்த்ததும் வாத்தியாரையா, "துரை! நீ சென்னைக்குப் போய் மேலே படிக்கப் போகிருய். இந்த மாமா உனக்கு உதவி செய்யப் போகிருர். உனக்குக் கடவுள் எல்லா சுகங்களையும் கொடுக்க வேண்டும்'' என்ருர்.

நான் கண்ணுடியை அவரிடம்கொடுத்தேன். அதை வாங்கிப் போட்டுக் கொண்டு அவர் ஒரு காகிதத்தை எடுத்துப் படித்தார். படித்த பிறகு அதை என்னிடம் கொடுத்து என் அன்னையிடம் படித்துக் காட்டச் சொன்னுர்.

நான் ஆவலுடன் சமையல் அறைக்குச் சென்றேன். சுவாமி படத்துக்கு அருகில் வைத்திருந்த விளக்கின் ஒளியில் அதை அம்மாவுக்குப் படித்துக் காட்டினேன். கடிதத்தில் என்ன எழுதப்

பட்டிருந்தது என்பது இப்போது தெளிவாக நினைவில்லை. அதன் சாராம்சம் இதுதான்.

"ரங்கதுரைக்கு அநேக ஆசீர்வாதம்.

இதுவரை உனக்கு என்ன எழுதுவது என்றே தெரியவில்லை. நான் விடுதலையடைந்து வந்ததும் உன்னை நன்றாகப் படிக்க வைக்க வேண்டும் என்ற ஆசை எனக்குத் தீவிரமாக ஏற்பட்டிருக்கிறது. உன் தாயாருக்கு இந்த ஆசை நீ பிறந்தது முதல் உண்டு. நான் வருவதற்கு ரொம்ப நாட்களாகும். இந்தக் கடிதம் கொண்டு வருபவர் என்னிடம் மிகவும் சிநேகமாக இருக்கிறார். இவர் சொல்வது போல் நீ கேட்டு நடக்க வேண்டும். உன்னை இவர் பட்டணத்துக்கு அழைத்துக் கொண்டு போய்ப் படிக்க வைப்பதாக எனக்கு வாக்குறுதி கொடுத்திருக்கிறார். அதனால் நீயும் அம்மாவும் அவருடைய யோசனைப்படி நடந்து கொள்ளுங்கள். நான் வருவதற்குள் நீ ரொம்பக் கெட்டிக்காரனாகிவிட வேண்டும். இறைவனுடைய அருள் உனக்குப் பரிபூரணமாக இருக்க வேண்டுமென்று நான் பிரார்த்தனை செய்து கொண்டே இருப்பேன்.

இப்படிக்கு உன் அப்பா,
கந்தசாமி"

அதைப் படித்ததும் நானும் அம்மாவும் ரொம்பக் கண்ணீர் விட்டுக் கதறி விட்டோம். உணர்ச்சி வசத்தால் என்னால் படிக்கவே முடியவில்லை. விம்மிக் கொண்டே படித்தேன்.

வாத்தியாரையா என்னைக் கூப்பிட்டார். நான் கண்களைத் துடைத்துக் கொண்டு அவரிடம் சென்றேன்.

"துரை! நீகூட இப்படி அழலாமா? அம்மாவைச் சமாதானப்படுத்த வேண்டியது உன்னுடைய கடமை இல்லையா?" என்று அவர் கேட்டார்.

நான் உடைந்த குரலில் அந்தப் புதிய மனிதரைப் பார்த்து, "அப்பா இதில் எழுதியிருப்பதைப் பார்த்தால் அவருக்கு உங்களோடு வரும் எண்ணம் இருந்ததாகத் தெரியவில்லையே!" என்றேன்.

"ஆமாம் துரை! இதை எழுதும்போது அவர் என்னுடன் வருவதாக இல்லை. நான் மட்டும் தான் தப்பி வருவதாக இருந்தேன். அவர் ஒத்தாசை செய்வதாகத்தான் சொன்னார். எனக்கு என்

# ஹாஸ்யக் களஞ்சியம்












சொந்தக் காரியம் இருந்தது. அதைச் செய்து விட்டு உங்களையும் கவனித்துக் கொள்வதாகச் சொன்னேன். அவரும் சரியென்று சொல்லியிருந்தார். கடைசியில் தாமும் வருவதாகச் சொன்னார். அவரால் சிறையின் தனிமையைத் தாங்க முடிய வில்லை. எப்படியேனும் தப்பி விட்டால் உங்களுடன் எங்கேயாவது போய்விடலாமென்று எண்ணினார். ஆனால் துரதிர்ஷ்டவசமாக இப்படி நேர்ந்து விட்டது. நாங்கள் இருவரும் சுவரேறிக் குதித்த போது ஒரு நாய் குரைத்து எங்களைக் காட்டிக் கொடுத்து விட்டது. நாங்கள் மிக வேகமாகத் தான் ஓடினோம்.

"ஆனால் அந்தப் போலீஸ்காரர்கள் துப்பாக்கியால் சுட்டார்கள். உன் தந்தைக்கு அடிபட்டது என்று எனக்குத் தெரிந்ததும் நான் நின்று அவரைப் பார்த்தேன். 'ஓடு! ஓடு!' என்று அவர் சத்தம் போட்டார். அந்தச் சந்தர்ப்பத்தில்கூட அவருக்கு நானாவது தப்பிச் சென்றால் உங்களைக் காப்பாற்றுவேன் என்று தோன்றியிருக்க வேண்டும். அவர் அப்படிச் சொல்லியிருக்காவிட்டால் நிச்சயமாக நானும் பிழைத்து வந்திருக்க மாட்டேன்" என்று கூறினார்.

வாத்தியாரையா, "நீங்கள் அன்று பிழைத்தது ரங்கதுரைக்காகத் தான் என்று நான் நினைக்கிறேன். மேற்கொண்டு செய்ய வேண்டியதையெல்லாம் இவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள்" என்றார்.

விந்தை மனிதரும் உடனே என்னைப் பார்த்து, "நான் சென்னையில் வீடு ஏற்பாடு செய்து விட்டேன். வருகிற ஞாயிற்றுக் கிழமை மாலை நீங்கள் புறப்பட்டுச் சென்னைக்கு வந்து சேருங்கள். அங்கே ரயிலடிக்கு ஒருவரை அனுப்பி வைக்கிறேன். உனக்குப் பள்ளிக்கூடத்துக்கும் ஏற்பாடு செய்து விட்டேன். நான் வந்தாலும் வராவிட்டாலும் என் நண்பர் உங்களைக் கவனித்துக் கொள்வார். நீங்கள் கட்டாயம் ஞாயிற்றுக் கிழமை புறப்பட்டு வந்து விடுங்கள்" என்றார். என் அன்னை












சமையல் அறையின் அருகில் நின்று கொண்டிருந்தவர் கண்களில் கண்ணீருடன் தலையை ஆட்டினார்.

ஞாயிற்றுக்கிழமையன்று அல்லிக் குளம் கிராமத்தினிடமும், என் அருமைத் தமிழ் வாத்தியாரிடமும் பிரியாவிடை பெற்றுக் கொண்டு நானும் என்னுடைய அன்னையும் சென்னைக்குப் புறப்பட்டோம்.

அன்று நான் சென்னைக்குச் சென்றபடியால் என் வாழ்க்கையில் எத்தனை மாறுதல் உண்டாயிற்று! முன்பின் தெரியாத ஒரு மனிதரிடம் நான் வைத்த அளவற்ற நம்பிக்கை என் வாழ்வையே மாற்றி அமைத்து விட்டது. அந்த மனிதரின் பெயர்கூட எனக்குத் தெரியவில்லை. வாத்தியாரையாவிடம் அவர் சொல்லி யிருக்க வேண்டும். நான் சிறுவனானபடியால் ரகசியமான விஷயத்தை என்னிடம் சொல்லக் கூடாதென்று தீர்மானித்து விட்டார்கள் போலும். அதன் பிறகு அவரை நான் நேரில் பார்க்கவே முடியாமல் போய் விட்டது. அந்த உத்தமரைப் பற்றி வெகு நாட்களுக்குப் பின்னர் ஒரு போட்டோ ஆல்பத்தைப் பார்த்து விவரங்கள் அறிந்து கொண்டேன். (தொடரும்)

# தமிழ் கூறும் நல்லுலகம்

ஹௌரா திருவள்ளுவர் கலை மன்றத்தின் இரண்டாவது ஆண்டு விழா நவம்பர் 12, 13-ம் தேதிகளில் இனிது நடைபெற்றது. முதல் நாளைய நிகழ்ச்சிக்கு மன்றத்தின் தலைவர் திரு. ஏ. என். சட்டநாதன் தலைமை வகித்தார். வான்புகழ் கொண்ட வள்ளுவரின் குறளைப் பற்றித் திரு. கே. பி. கைத்தான் ஆற்றிய ஆங்கிலச் சொற்பொழிவு குறிப்பிடத்தக்கது. அவருக்குப் பின் பேசிய டாக்டர் கேசவன் அவர்கள் தமிழ் இலக்கியத்தை வடநாட்டவரிடையே பரவச் செய்வதுடன், வடநாட்டு இலக்கியங்களிலும் நாம் ஈடுபாடு கொண்டு இரு நாட்டுக்கும் உள்ள தொடர்பை அதிகப்படுத்த வேண்டியதன் அவசியத்தையும் அழகாக வற்புறுத்தினார். திரு. ஏ. எஸ். கிருஷ்ணன் அவர்கள் வடநாட்டு இலக்கியங்களுக்கும் தென் நாட்டு இலக்கியங்களுக்குமுள்ள ஒற்றுமைகளைத் தம் பிரசங்கத்தில் குறிப்பிட்டார்.

ஸ்ரீமதி ஜயா மாதவன் கோஷ்டியாரின் இன்னிசை விருந்து விழாவின் சிகரமாக விளங்கியது.

இரண்டாம் நாள் நிகழ்ச்சிக்குத் தமிழ் மாணவர் மன்றத் தலைவர் திரு ப. ந. தியாகராஜன் அவர்கள் தலைமை வகித்தார். திரு டி. சீனிவாஸன், திரு கோ. ஆ. வெங்கடேசன், திரு கோபாலசுந்தரம், திரு ஜம்புநாதன், திரு கோ. சு. மணியம், பம்பாய்த் தமிழ்ச் சங்கம் திரு வெங்குசாமி முதலியோர் தமிழ் மொழியின் வளர்ச்சி பற்றியும் வள்ளுவர் வழியில் வந்த புலவர்களின் காவிய ரஸத்தைப் பற்றியும் பேசினார்கள். பள்ளிக் குழந்தைகளின் கும்மி கோலாட்டம் விழாவைச் சிறப்பித்தது. ஹௌராவிலுள்ள இளம் பாடகிகளின் சங்கீதத்துடன் வள்ளுவர் கலை மன்றத்தின் ஆண்டு விழா இனிது முடிவுற்றது.

பூனாவிலுள்ள தென்னிந்தியர்கள் ஹரிஹர பஜன சமாஜத்தில் நாதஜோதி ஸ்ரீ முத்துசாமி தீக்ஷிதர் விழாவை மிக விமரிசையாக நவம்பர் 21ம் தேதி முதல் 24ம் தேதி வரை கொண்டாடினார்கள். இவ் விழா புரந்தரதாஸ-தியாகபிரம்ம ஆராதனைக் கமிட்டியாரால் நடத்தப் பட்டது. ஸ்ரீ டி. எம். வேங்கடராமன் அவர்கள் விழாவைத் துவக்கி வைத்தார்கள். நான்கு நாட்களும் வாய்ப்பாட்டுக் கச்சேரி வீணைக் கச்சேரிகள் முதலியன அமோகமாக நடைபெற்றன. இவ் வருஷத்து விசேஷ அம்சம் என்ன வென்றால் இப் பக்கத்து மக்கள் கேட்டுப் பத்து ஆண்டுகளுக்கு மேலாகி யிருந்த நாகஸ்வர இன்னிசையை ராஜமடம் சகோதரர்களான ஸ்ரீ ஆர். எஸ். கணேசரத்னமும் ஸ்ரீ ஆர். பாலசுப்ரமணியமும் வழங்கியது தான். கமிட்டியின் தலைவரான திரு பி. வி. ராமன் இவ்வாராதனையில் கலந்து கொண்டு சிறப்பித்த அனைவருக்கும் நன்றி தெரிவித்தார்.

★

இந்தூரில் தென்னிந்திய கலாசார சங்கத்தின் ஆதரவில் நவம்பர் மாதம் 14-ம் தேதி பாரத நாட்டின் பிரதம மந்திரி நேருஜியின் பிறந்த தினமும், கவிச் சக்கரவர்த்தி பாரதியாரின் தினமும், முத்துஸ்வாமி தீக்ஷிதர் தினமும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டன. பாரதியாரைப் பற்றி அவருடைய ஒன்றுவிட்ட சகோதரி மீனாக்ஷி அம்மாள் மிக நன்முகப் பேசினார். முத்துஸ்வாமி தீக்ஷிதரைப் பற்றி இந்தூர் ரேடியோ நிலையத்தைச் சேர்ந்த திரு பார்த்தசாரதி பேசினார். அவர் திருவாரூரில் கட்ட இருக்கும் மும்மூர்த்திகளின் ஞாபகச் சின்னத்துக்குப் பண உதவி புரியும் படி சபையோரைக் கேட்டுக் கொண்டார்.

*10 சைக்கிள் வியாபாரிகளில் 8 பேர்கள்

# ஹெர்குலிஸ்

தான் நீங்கள் கொடுக்கும் பணத்திற்குத் தகுந்த
பெறுமானம் அளிக்கிறது என்கிறார்கள்



நீங்கள் குறைந்த விலைக்கோ அல்லது அதிக விலைக்கோ சைக்கிள் வாங்கலாம். ஆனால் ஹெர்குலிஸ்ஸைக் காட்டிலும், கொடுக்கும் பணத்திற்குத் தகுந்த பெறுமானமுடைய வேறு ஒரு சைக்கிள் பெறமுடியாது. இந்த உண்மையை அறிந்துதான் பத்து சைக்கிள் வியாபாரிகளில் எட்டுபேர்கள் 'நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு ஹெர்குலிஸ் தகுந்த பெறுமானம் அளிக்கிறது' என்கிறார்கள். அவர்களுடைய புத்திசாலித்தனமான ஆலோசனையைப் பின்பற்றி ஹெர்குலிஸ் சைக்கிளையே வாங்குங்கள்

* ஒரு தனிப்பட்ட ஆராய்ச்சியின் மூலம் நிரூபிக்கப் பட்டுள்ளது.

சைக்கிளில் முதலீடு செய்வது ஒரு சிறந்த மூலதனம் போலாகும்

# ஹெர்குலிஸ்

நீங்கள் கொடுக்கும் பணத்திற்குத் தகுந்த பெறுமானம் அளிக்கிறது

தயாரிப்பவர்கள்: டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்

TIC 2342 (A)

# சிவன் கீர்த்தனைகள்

ஸ்வர அமைப்பு—செம்மங்குடி சீனிவாச ஐயர்

கீர்த்தனம் 13 — ராகம் ஸிம்மேந்திர மத்யமம் — ஆதி தாளம்

### பல்லவி

பழனியப்பா நின் பதம் மறவேன் எப்
பதவி வந்தாலும் கந்தா குருபரா (பழனியப்பா)

### அனுபல்லவி

மழை நிகர் பைங்குழல் வள்ளிகுஞ்சரி - ம -
ணாளநின் வேலையும் பங்கஜ நயன தேன் (பழனி)

### சரணம்

இன்பதுன்பம் எதிலும் நீ துணையிருந்
தெம்மைக் காத்தருள வேண்டும்
அன்புடன் ஆண்டவனே உன்னை மறவா
அடியிணை பணிய வரம் தருவாய் தேன் (பழனி)

ஸிம்மேந்திர மத்யமம் 57-வது மேளமான தாய் ராகம்- ராகாங்க ராகம்—ஸம்பூர்ண ராகம்:—இதில் வரும் ஸ்வரங்கள்:—சதுச்ருதி ரிஷபம், சாதாரண காந்தாரம், ப்ரதி மத்யமம், பஞ்சமம், சுத்ததைவதம், காகலி நிஷாதம்.

### பல்லவி — 1 களை

| | | |
|---|---|---|
| ; ப தா நி நி த ; பா ; பா | , ம க ரீ க மா | பா ; ; ; \|\| |
| - ப ழ னி ய - ப் பா - நின் | - - ப தம் ம ற | வே - - ன் |
| ; ப தா நிஸ்நிதா ; பா த நி தபா | , ம க ரீ க மா | பா ; ; ; \|\| |
| - ப ழ னி- ய - - ப் பா - - நின் - | - - பதம்ம ற | வே - - ன் |
| ; ப தா நி த நி ரி நி தா , நி தபா | , ம ப தா ம தா | பா ; ; ; \|\| |
| - ப ழ னி ய - - - ப்பா - - நின் - | - - ப தம் ம ற | வே - - ன் |
| ; ப தா நி த நி ஸாரிஸ்நி தபாதநி தபா | , ம பதா ம த ப | தா ; ; தா \|\| |
| - ப ழ னி ய - - - - ப்பா - - நின் - | - - பதம் ம ற - | வே ; ன் எப் |
| ; ப தா நி த நி ஸா ; ஸா ரி | ஸா ; ; த ரி | ஸ நி த நி தபா ; \|\| |
| - ப த வி வ ந் தா - லும் க | ந்தா - - கு - | ரு - ப - ரா - - - |
| , ம ப தா நி த நி ஸாரிஸ்நி தபாதநி தபா | , ம ப தா ம த ப | தா ; ; நி \|\| |
| - - ப ழ னி ய - - - - - ப்பா - - - நின் - | - - ப தம் ம ற - | வே - ன் எப் |
| ஸ ரி ஸ ஸ ஸ த நி ஸா ; ஸா ஸ ரி | கா ரி ; ஸ ரி | ஸ நி த நி ஸ நி த ப \|\| |
| ப - த - வி - வந்தா - லும் க ந் | தா - - கு - | ரு - ப - - - ரா |
| த ம ப தா நி த நி ஸாரிஸ்நி தபாதநி தபா | , ம ப தா ம த ப | தா ; ; நி \|\| |
| - - ப ழ னி ய - - - - - ப்பா - - - நின் - | - - ப தம் ம ற - | வே - ன் எப் |
| ஸ ரி ஸ ஸ ஸ த நி ஸா ; ஸா ப த | நி ஸ ரி கா ரி ரி ரி | ஸ நி த நி ஸ நி த ப \|\| |
| ப - த - வி - வ ந்தா - லும் க ந் | தா - - - - - - கு - | ரு - ப - - - ரா - |
| த ம ப தா நி த நி ரி நி தா , நி தபா | , ம ப தா ம தா | பா ; ; ; \|\| |
| - - ப ழ னி ய - - - ப்பா - - நின் - | - - ப தம் ம ற | வே - - ன் |

### அனுபல்லவி

| | | |
|---|---|---|
| ; ஸ ஸா த நி ஸா ; ஸ நி ஸா | ரி ; ரி ஸ ரி | ; கா க ரி ரி \|\| |
| - ம ழை நி கர் பை ங் கு - ழல் | வ ள் ளி - கு | ஞ் ச ரி - - |
| ; ஸ ஸா த நி ஸா ரி க ரி ஸ நி ஸா | ரி ; ரி க ரி | ஸ நி ஸா ரி ; \|\| |
| - ம ழை நி கர் பை ங் - - கு - ழல் | வ ள் ளி கு ஞ் | - - ச ரி - |







# க்ளீகோடின்-டெர்ப்-வசாகா

அலெம்பிக் கெமிகல் ஒர்க்ஸ் கம்பெனி லிமிடெட், பரோடா - 3.

•

நீங்கள் அலெம்பிக்கின் மேல் பூரண நம்பிக்கை வைக்கலாம்.

---




"ஒரு வாரமாக ஜல தோஷம். முதலில் டாக்டர் ராகவனைப் பார்த்தேன். ஒரு மாத்திரை கொடுத்தார். அதில் ஒன்றும் குணம் தெரியவில்லை. அப்புறம் டாக்டர் மாதவனைப் பார்த்தேன். அவர் ஒரு மிக்சர் கொடுத்தார். அதிலும் குணம் தெரியவில்லை. அதற்கப்புறம் டாக்டர் பூபதியைப் பார்த்தேன். அவர் ஒரு இஞ்செக்ஷன் கொடுத்தார். புண்ணியமில்லை..."

"அடடே! ஒரு ஜலதோஷத்துக்காகவா இவ்வளவு......?"

"ஆமாம்! ஜலதோஷம் என்றால் சாதாரண ஜலதோஷமா......? இன்னும் அந்த ஜலதோஷம் விடவில்லை யென்றால் பாருங்களேன்...!"

"பெரிய ஜலதோஷமாகத்தான் இருக்கணும். இவ்வளவு டாக்டர்கள் பார்த்தும் இவ்வளவு மருந்து செலுத்தியும் போகவில்லை யென்றால்?...ஆமாம், ஜலதோஷமாக இல்லாமல் வேறு ஏதாவது புது வியாதியாக இருக்குமோ? மாத்திரை, மிக்சர், இஞ்செக்ஷன் இவ்வளவுக்கும் குணமாகவில்லை என்கிறீர்களே! ஏன் நீங்கள் ஒரு எக்ஸ்ரே எடுத்துப் பார்த்துக் கொள்ளக் கூடாது?"

"அதற்குத்தான் இந்த டாக்டர்களெல்லாம் பிரயோஜனமில்லை என்று ஸர்ஜன் கஜபதியைப் போய்ப் பார்த்தேன்."

"அவர் என்ன சொன்னார்? ஏதாவது மைனர் ஆபரேஷன் செய்யணும் என்று சொன்னாரா?"

"அப்படியெல்லாம் ஒன்றும் சொல்லவில்லை. ஜலதோஷத்தோடு இருமலும் இருக்கிறதா என்று கேட்டார். இல்லை என்று சொன்னேன். அப்படியானால் வெறும் ஜலதோஷத்தை வைத்துக் கொண்டு எதுவும் செய்ய முடியாது. இரண்டு நாட்கள் கழித்து இருமலோடு வாருங்கள் என்று சொன்னார்..."

"அப்படின்னா இன்னும் இரண்டு நாட்கள் கழித்து அவரைப் போய்ப் பார்க்க வேணுமாக்கும்!"

"ஆமாம்! சாதாரணமாகப் போய்ப் பார்க்கக் கூடாது. இருமலோடு போய்ப் பார்க்கணும். நானும் இருமி இருமிப் பார்க்கிறேன். ஆனால் வர மாட்டேன் என்கிறது, என்ன செய்வது?"

"வரமாட்டேன் என்கிறதா? ஐயோ, பாவம்! நான் ஒரு யோசனை சொல்கிறேன், கேட்கிறீர்களா?"

"என்ன?"

"நீங்கள் உடனே வேறொரு டாக்டரைப் பார்த்து இருமல் வருவதற்கு ஏதாவது மருந்து வாங்கிச் சாப்பிடுங்கள். அப்புறம் கஜபதியிடம் போங்கள்!"

"அப்படித்தான் நானும் யோசனை செய்திருக்கிறேன்."

"சரிதான், சாதாரண ஜலதோஷமாயிருந்தாலும் இதில் உங்களுக்கு ரொம்ப ரூபாய் செலவாகியிருக்கும் போலிருக்கிறதே?"

"செலவாகாமல் என்ன செய்யும்? நம்முடைய அந்தஸ்துக்குத் தகுந்தாற்போல் செலவாகத்தானே செய்யும்? நாற்பது ரூபாய்வரை செலவாகி விட்டது. இது கூடச் செலவாகா விட்டால்?......"

"ஆமாம், ஆமாம்! நன்றாயிருக்காது. நாற்பது ரூபாய் என்ன, நானூறு செலவானால் கூடப் பெரிதல்ல. உங்களைப் போன்றவர்களுக்கு ஜலதோஷமே வரக் கூடாது. வந்தால் என்ன செலவானாலும் அதை ஒழித்துக் கட்டி விட்டுத்தான் மறு காரியம் பார்க்க வேண்டும்."

நான் சொல்லி முடிப்பதற்குள்ளாகச் சபாரத்தினம் 'அக்' 'அக்' என்று இரண்டு தும்மல் தும்பினார். பிறகு கைக்குட்டையால் மூக்கைத் துடைத்துக் கொண்டே, "பார்த்தீர்களா? எவ்வளவு பலமாகப் பிடிச்சிருக்கிறது என்று ...?" என்று கூறினார்.

"ஏ, அப்பா! ரொம்பப் பலமாகத்தான் பிடிச்சிருக்கிறது. இவ்வளவு சுலபமாகத் தும்முகிறீர்கள்! ஆனால் ஏன் இருமல் வரமாட்டேனென்கிறது?"

"அதுதானே எனக்குப் புரியவில்லை. இருமல் என்றால் தொண்டையிலிருந்து வர வேண்டியிருக்கிறது. தும்மல் என்றால் மூக்கோடு தீர்ந்து போய் விடுகிறது."

"சரிதான். தும்மல் வரும்போது அதை மெதுவாக இருமலாக்கிக் கொள்ள நீங்கள் முயற்சி செய்ய வேண்டும்!"

"அதையும் செய்து பார்த்து விட்டேன். முடியவில்லை. மூச்சுத் திணறுகிறது. எப்

படி இருந்தாலும் இருமல் இருமல்தான்! தும்மல் தும்மல்தான் சார். இருமல் தும்மலாகாது, தும்மல் இருமலாகாது.''

"அது எப்படியாகும்? ஒரு விஷயம் கவனித்தீர்களா? இருமினால் யாரும் ஒன்றும் சொல்லுவதில்லை. ஆனால் தும்மினால் மாத்திரம் அபசகுனம் என்று சொல்லுகிறார்கள்!''

"அதெல்லாம் தவறு சார்! எனக்கும் மூன்று வயதிலிருந்து இந்த ஜலதோஷம் உண்டு. அன்றிலிருந்து இன்றுவரை ரொம்ப சர்வ சாதாரணமாகத் தும்மிக் கொண்டுதான் வருகிறேன். அதனால் ஒரு விதக் கெடுதலும் சேர்ந்து விடவில்லை. நான் கல்யாணத்துக்குப் பெண் பார்க்கப் போன சமயத்தில் கூடத் தாராளமாகத் தும்மினேன். இதனால் எனக்குக் கல்யாணமாகாமல் போய் விட்டதா?''

"என்ன? என்ன?''

"ஆமாம், நான் கல்யாணத்துக்குப் பெண் பார்க்கப் போன போது என்னுடைய மாமாவும் தகப்பனாரும் கூட வந்தார்கள். என் மாமாவுக்கு ஒரு கவலை. நான் அடிக்கடி தும்முகிறவனாச்சே! பெண் பார்க்கிற சமயத்தில் தும்மி வைத்தால் அபசகுனமென்று கல்யாணம் நின்று விடுமோ என்று பயப்பட்டார். இதனால் அடிக்கடி என்னைத் தும்மாமல் இருக்கும்படி எச்சரிக்கை செய்து கொண்டிருந்தார். நானும் தும்மக் கூடாது, தும்மக் கூடாது என்ற நினைவிலேயே அதி ஜாக்கிரதையாக இருந்தேன். பெண் வீட்டுக்காரர்கள் எங்களை மிகவும் உபசாரம் செய்தார்கள். பெண்ணும் வந்து எங்களுக்கு நமஸ்காரம் செய்து விட்டு எதிரில் நின்றாள். ஆஹா! என்ன அழகு! என்ன அழகு! அவள் அழகில் நான் உலகையே மறந்து விட்டேன். உலகையே மறந்து விட்ட பொழுது எனக்குத் தும்மலைப் பற்றிய ஞாபகம் எங்கே இருக்கப் போகிறது? ஆனால் தும்மலை நான் மறந்தாலும் தும்மல் என்னை மறக்கவில்லை. நல்ல சமயத்தில் வந்து என்னை ஆட்கொண்டு விட்டது. தொடர்ந்து எவ்வளவு தும்மல் என்னால் முடியுமோ அவ்வளவும் தும்மி விட்டேன். தும்மல் ஓய்ந்தபின் பெண் வீட்டுக்காரரையும் என் தகப்பனாரையும் பார்த்தேன். பெண்ணைப் பார்க்க எனக்கு வெட்கமாக இருந்தது. அதனால் அவளைப் பார்க்கவில்லை. அவ்வளவு நேரமும் சந்தோஷமாய் இருந்த பெண் வீட்டுக்காரரின் முகம் வாடி இருந்தது. என் தகப்பனாரின் முகத்திலும் வருத்தக் குறி தாண்டவமாடியது. மாமா பல்லைக் கடித்துக் கொண்டேயிருந்த கோபத்தோடு என்னைப் பார்த்தார்.

'ஒரு மங்களகரமான காரியத்தைப் பேசி முடிக்கும்போது அபசகுனம் போலத் தும்மினால்...? எனக்கென்னவோ இதில் மனசு இடங்கொடுக்க வில்லை!' என்றார் பெண் வீட்டுக்காரர்.

'அவனுக்கு இரண்டு நாளாக நல்ல ஜலதோஷம். அதனால் தும்மினான். அதை நீங்கள் வித்தியாசமாக எடுத்துக் கொள்ளக் கூடாது' என்றார் என் தகப்பனார்.

'இருக்கலாம். தும்முவதை இரட்டைப் படையாகத் தும்மியிருக்கலாம் அல்லவா? ஒற்றைப் படையாக அல்லவா தும்மி விட்டார்! என்ன செய்வது?' என்றார் பெண்ணைப் பெற்றவர்.

'அப்படி யென்றால் அவன் எவ்வளவு தும்மல் தும்மினான்? நீங்கள் சரியாக எண்ணிப் பார்த்தீர்களா?' என்று என் மாமா பெண்வீட்டுக்காரரைப் பார்த்து ஒரு அழுத்தமான கேள்வியைப் போட்டார்.

'எண்ணிப் பார்க்காமலா சொல்லுவேன்? சரியாக ஏழு தும்மல் தும்மியிருக்கிறார். அது ஒற்றைப் படையா, இல்லையா? சொல்லுங்கள்!' என்றார் பெண்ணின் தகப்பனார்.

'இல்லை, நான் எண்ணினேன். அவன் எட்டுத் தும்மல்தான் தும்மியிருக்கிறான். நீங்கள் ஒன்றை எண்ணாமல் விட்டு விட்டீர்கள்' என்றார் என் மாமா.

'நான் விடவில்லை. சரியாகத்தான் எண்ணினேன். ஏழே தும்மல் தான்' என்றார் பெண் வீட்டுக்காரர்.

'இல்லை, எட்டு' என்று ஆவேசம்வந்தவர் போல்சொன்னார் மாமா.



மதுரை பிரபல நகை வியாபாரி ஸ்ரீ ஆர். ராமநாதன் செட்டியார் அவர்களின் புதல்வி சௌ. ருக்மிணிக்கும் ஆனைமலை மிராசுதார் ஸ்ரீ அம்பாரம் வெங்கிடபதி செட்டியார் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி பாஸ்கரன், B.E.க்கும் 18-11-55ல் மதுரையில் மணமகள் இல்லத்தில் விவாகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மணமக்களை வாழ்த்திப் பல பாகங்களிலிருந்து பெரியோர்களின் ஆசிச் செய்திகளும் பரிசுகளும் வந்தன. மாலையில் நடைபெற்ற ராதா ஜெயலட்சுமியின் இன்னிசைக் கச்சேரிக்கு ஏராளமான பிரமுகர்கள் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

வாழ்க. ருக்மிணி - பாஸ்கரன்



# லண்டனுக்கு பி.ஓ.ஏ.ஸி.

# Coronet

## கோரோனெட் டூரிஸ்ட் ஸர்வீஸ்கள் மூலம் பறந்து செல்லுங்கள்



மிகக் குறைந்த ப்ரத்யேகமான ஆப்-ஸீஸன் டூரிஸ்ட் கட்டணங்களில் ராஜபோகத்தில் பிரயாணம் செய்வதுடன் ரூ. 599 மிச்சப் படுத்துங்கள்.

| | | |
|---|---|---|
| மதராஸ் | ஒரு வழி | ரூ. 1484 |
| லண்டன் | போகவர | ரூ. 2687 |

இப்பிரத்யேக ஆப்-ஸீஸன் கட்டணங்கள் இந்தியாவிலிருந்து 1955 ஆகஸ்டு முதல் தேதி முதல் 1956 பிப்ரவரி 29ந் வரை வழங்கப்படும். திரும்பும் பிரயாணம், பிரயாணச் சீட்டு அமுலிலிருக்கும் காலத்திற்குள் (அதாவது ஒரு வருஷம்) செய்யலாம். மிகக் குறைந்த இந்த ஆப்-ஸீஸன் பிரயாணக் கட்டணங்கள் மற்றுமுள்ள பெரிய ஐரோப்பிய நிலயங்களுக்கும் கிடைக்கும். பி. ஓ. ஏ. ஸி. மற்றும் குவாண்டாஸ் சர்வீஸ்களுக்கு பம்பாயிலிருந்து உடனே பிரயாண இணைப்புகள் உண்டு.

**பி. ஓ. ஏ. ஸி. உங்கள் நலனைக் கருதி சேவை செய்கிறது**

விவரங்களுக்கு உங்கள் உள்ளூர் டிராவல் ஏஜண்டிடமோ அல்லது பி. ஓ. ஏ. ஸி. 35/4 மவுண்ட் ரோட், மதராஸ் 2 டெலிபோன் 85394 இவர்களிடமிருந்து அறியவும்.

# FLY B·O·A·C

பி. ஓ. ஏ. ஸி. விமானம் மூலம் பறந்து செல்லுங்கள்

**பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேஸ் கார்பரேஷன்**

மாமா எவருக்கும் எந்த விஷயத்திலும் எப்பொழுதும் விட்டுக் கொடுத்துப் பேசியதே இடையாது. அதுவும் கல்யாண விஷயமென்றால் அவர் ரொம்பக் கண்டிப்பு. சொன்னால் சொன்னதுதான். ஆனால் என் தகப்பனார் எதிலும் கொஞ்சம் சமாதானமாகப் போகக்கூடியவர். அவர் மாமாவைச் சமாதானப்படுத்தி, 'சரி, ஏழு தும்மலே தும்மினதாக இருக்கட்டும். அது தோஷமென்றால் அவனை இன்னொரு தும்மல் தும்மிவிடச் சொல்லுகிறேன். இரட்டைப் படையாகப் போய் விடும். உங்களுக்குச் சம்மதம்தானே?' என்றார்.

பெண்ணைப் பெற்றவர் இதற்கு ஒருவிதமாக இணங்கவே நானும் ஒரு தும்மல் தும்மி வைத்தேன். கல்யாணமும் நிச்சயமாயிற்று. அதற்கப்புறம் கல்யாணத்தின் போது நான் எவ்வளவு தும்மல் தும்மியிருக்கிறேன், தெரியுமா? தாலி கட்டும் போதுகூடத் தும்மினேன். என் மாமனார் சாகும்வரையில் கூட யாராவது என்னைப் பற்றி விசாரித்தால் என் தும்மலைப் பற்றித் தான் பிரமாதமாகப் புகழுவார்."

"அப்படியா? அப்படியானால் தும்மல் என்பது ஒவ்வொரு மனிதனுக்கும் அவசியமாக வேண்டிய பொருள் என்று சொல்லுங்கள்!" என்றேன்.

"ஆமாம் சந்தேகம் என்ன? ஆனால் டாக்டரிடம் போவதென்றால் இருமல் அல்லவா வேண்டியிருக்கிறது?" என்றார் சபாரத்தினம் கவலையுடன்.

"காலையில் உங்களைப் பேட்டி கண்டதில் ஒரு முக்கியமான விஷயம் தெரிந்து கொண்டேன்!" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே எனக்கு இருமல் வந்து விட்டது. ஒரு மூச்சு இருமி நிறுத்தினேன்.

"சார், நீங்கள் ரொம்ப நன்றாக இருமுகிறீர்கள்!" என்றார் சபாரத்தினம்.

"உங்களைப் பார்த்தால் எனக்குப் பரிதாபமாக இருக்கிறது, சார்! இந்த இருமல் உங்களுக்கு வந்திருக்கலாம். இந்த இருமலில் எனக்குள்ள அனுபவத்தில் 'தும்மலும் இருமலும்' என்று ஒரு பெரிய புத்தகம் எழுதலாம் என்று நினைக்கிறேன். இருமலைப் பற்றி எனக்குத் தெரியும். தும்மலைப்பற்றி உங்களுக்கு..." என்றேன்.

"அவசியம் இதற்கு ஒரு புத்தகம் எழுத வேண்டியதுதான், சார்! ஆனால் 'தும்மலும் இருமலும்' என்பதோடு ஜலதோஷமும் என்று சேர்த்துக் கொண்டால்......?"

"ஜலதோஷத்தைச் சேர்த்தால் அப்புறம் தலைவலியையும் சேர்க்கும்படியாக இருக்கும். அது ரசிக்காது. இப்பொழுதெல்லாம் 'அவலும், உமியும்', 'உரலும் உலக்கையும்', 'கண்ணும் கண்ணீரும்' இப்படியெல்லாம் புத்தகங்களுக்குப் பெயர் வைத்தால்தான் பிடிக்கிறது!"

# கல்கி

(வாரம் பதிப்பு)

## சந்தா விவரம்

★

| | | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|---|
| இந்தியா இலங்கை | ரூ. | 13-0-0 | 6-8-0 |
| பர்மா மலேயா வெளிநாடு | ரூ. | 16-4-0 | 8-2-0 |

குறிப்பு:—வி. பி. பி. மூலம் அனுப்புவது இடையாது. தயவு செய்து முன் பணம் அனுப்ப வேண்டும். இலங்கை நேயர்கள் மட்டும் வி. பி. பி. மூலம் சந்தாத் தொகையைச் செலுத்தலாம்.

கடிதம் எழுதும்போது சந்தா நேயர்கள் தங்கள் சந்தா நெம்பரைக் குறிப்பிடவும்.

மானேஜர் - கல்கி காரியாலயம் - சென்னை

"உங்களுக்குத் தெரியாத விஷயமா? என்னமோ நான் என் மனத்தில் பட்டதைச் சொன்னேன். நீங்கள் இப்படி ஒரு புத்தகம் வெளியிடுவதாக இருந்தால் நானே மூந்நூறு புத்தகம் விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்."

"அடடா! இப்படி யார் சார் சொல்லப் போகிறார்கள்? நீங்கள் முந்நூறு புத்தகம் வாங்கிக் கொள்வதாக இருந்தால் உங்கள் புகைப்படத்தைப் புத்தகத்தில் போடுகிறேன், சார்!"

"நீங்கள் புகைப்படம் போடும்பொழுது சாதாரணமாகப் போடக் கூடாது. நான் தும்மும் போது ஒரு படம் எடுத்துக் கொடுக்கச் சொல்லுகிறேன். அதைப் போடுங்கள். அப்பொழுதுதான் அழகாகவும் புத்தகத்தில் எழுதப்பட்டுள்ள விஷயத்துக்குப் பொருத்தமாகவும் இருக்கும்."

"உங்கள் யோசனை ரொம்பத் தரமாய் இருக்கிறது. நான் கூட இருமும்போது ஒரு படம் எடுத்துக் கொள்கிறேன். உங்களுடைய படத்தை முதலிலும் என் படத்தைக் கடைசியிலும் போட்டு விட்டால் ரொம்ப அழகாக இருக்கும்."

"பேஷ், பேஷ்!..." என்று ஆனந்த மேலீட்டினால் அவர் சொல்லிக்கொண்டே ஐந்தாறு தடவை தும்மினார். நானும் ஒரு மூச்சு இருமினேன்.

"இந்த நல்ல சந்தர்ப்பத்தில் நம்மைப் படம் பிடிக்க இங்கு ஒருவரும் இல்லாமற் போனதுதான் பெரிய துரதிருஷ்டம்!" என்றார் சபாரத்தினம்.

"நீங்கள் இப்படி அபசகுனம் மாதிரித் தும்மினால்......?" என்றேன் நான்.

# விதியை வெல்லுங்கள்!

எஸ்.வி.எஸ்

சென்னையில் பொதுநலத்திற்கு என ஏற்பட்ட எத்தனையோ அற்புதமான கட்டடங்கள் இருக்கின்றன. அக் கட்டடங்களில் அற்புதமான வேலைகள் நிகழ்கின்றன. வாஸ்தவம் தான். ஆயினும் மிகுந்த பரோபகாரமான தொண்டு புரியப்படும் ஓர் கட்டடம் சென்னைக்கு! அண்மையிலுள்ள அடையாற்றில் இருக்கிறது என்று சொன்னால் வியந்து போவீர்கள்.

ஆம் அடையாற்றிலுள்ள "கான்ஸர் இன்ஸ்டிட்யூட்" என்ற பெயரில் வழங்கும் புற்று நோய் வைத்திய ஆராய்ச்சிசாலையைத்தான் குறிப்பிடுகிறேன்.

கட்டடம் பார்க்கப் போனால் சிறிய கட்டடம்தான். அதிலுள்ள படுக்கைகள் எண்ணப் போனால் சொற்பம்தான். பொருளாதார நிலையைக் கருதப் போனால் பிரமிப்பு ஏற்படாது! இருப்பினும் அந்த ஆராய்ச்சி சாலை புரியும் தொண்டு மகத்தானது!

ஏனெனில், புற்று நோய் வைத்தியசாலை என்று பிரத்தியேகமான வைத்தியசாலைகள் இந்தியாவிலேயே மூன்றுதான் இருக்கின்றன. அதில் ஒன்று பம்பாயிலுள்ள டாட்டா புற்று நோய் ஆராய்ச்சி கூடம். அதை இப்பொழுது மத்திய சர்க்கார் எடுத்துக் கொண்டு நடத்துகிறார்கள். மற்றொன்று கல்கத்தாவில் இருக்கிறது. மூன்றாவது சென்னை அடையாற்றிலுள்ளதுதான். ஆனால் இங்குள்ளதோ இந்திய மாதர் சங்கத்தினரின் ஆதரவில் ஏற்படுத்தப்பட்டு நடப்பதாகும்.

மாதர்கள் ஒரு சேவை செய்யக் கருதினால் சாதித்தே தீருவார்கள் என்பது நமக்குத் தெரிந்த விஷயம். அந்தச் செயல் திறமைக்கு ஸ்தூல உருவமாக அமைந்துள்ளது இந்த இன்ஸ்டிட்யூட் அல்லது புற்று நோய் வைத்திய ஆராய்ச்சி ஆஸ்பத்திரி.

இத்தகைய வைத்தியசாலை ஆரம்பிக்க வேண்டும் என்ற முயற்சி 1936லேயே மேற்கொள்ளப் பட்டது. சுதந்திரமற்றிருந்த அக் காட்களில் அம்முயற்சி அவ்வளவு பலன் அளிக்கவில்லை. ஆயினும் இந் நோயின் காரணமாகத் துன்புறுகிறவர்களும் மடிகிறவர்களும் பெருகிக் கொண்டே வந்தார்கள். இவர்களுக்கு வைத்திய சிகிச்சைக்கான போதிய வசதி சென்னை ராஜ்யத்தில் இல்லாதிருந்தது. சென்னை சர்க்கார் ஆஸ்பத்திரிகளுக்கு வருபவர்களுக்குத் தக்க உதவி அளிக்க முடியாமல், திருப்பி அனுப்ப வேண்டியிருந்தது. இவ்விஷயம் 1949-ல் சென்னை மாதர் சங்கத்தினருக்கு எட்டியது. இம் மாதர் சங்கத்தின் தலைமைப் பொறுப்பு ஏற்றிருந்தவர் டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி. அவ்வருஷம் சங்கத்தினர் 'கான்ஸர் எதிர்ப்பு' வாரம் கொண்டாடினார்கள். அந்த வாரத்தின் போது புற்று நோய் ஆஸ்பத்திரி ஏற்படுத்துவது என முடிவு செய்யப்பட்டது.

அடுத்த சில ஆண்டுகளில் மாதர் சங்கத்தினர் கான்ஸர் கண்காட்சிகள், உதவிக் கச்சேரிகள், நடனங்கள், நாட்டியங்கள் எல்லாம் நடத்திச் சுமார் ஒன்றரை லட்சம் ரூபாய் வரை திரட்டினர். பின்னர் சென்னை சர்க்கார் ஆறு ஏக்கர் நிலதானமும் 50,000 ரூபாய் நிதி உதவியும் அளித்தனர். மத்திய சர்க்கார் ஒரு லட்சம் ரூபாய் கொடுத்தனர். இவற்றையெல்லாம் கொண்டு வெகு துரிதத்தில் ஒரு கட்டடம் எழுப்பத் தீர்மானித்தனர்.

இக் கட்டடத்துக்கு 1952-ல் நமது அருமைத் தலைவர் நேருஜிதான் அஸ்திவாரக் கல் பதித்தார். கட்டட வேலை வெகு மும்முரமாக நடைபெற்றது. அதன் பயனாக 1954-ல் நமது நிதி மந்திரி தேசமுக் திறந்து வைக்க முடிந்தது. அந்தக் கட்டடத்தில்தான் மேலே குறிப்பிட்ட பரோபகார வேலை பதினொரு மாதங்களாக நடைபெறுகிறது.

அந்தக் கட்டடம் சுமார் இரண்டரை ஏக்கர் நிலத்தில் இருக்கிறது. இருபத்தைந்து

இதுதான் அடையாறு ஆஸ்பத்திரியின் முன்புறத் தோற்றம்.





பாரதப் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு அஸ்திவாரக் கல் பதித்தார்.

படுக்கைகள் இருக்கின்றன. எக்ஸ்ரே வைத்திய முறைக்கான தக்க ஆயுதங்கள் இருக்கின்றன. ஆபரேஷன் தியேட்டர் இருக்கிறது.

"எல்லாம் இருக்கிறது பெட்டியிலே, ஆனால் இலைக் கறி கடையச் சட்டியில்லை" என்றாலும், அம்மாதிரி கட்டடம் எழும்பியாகி விட்டது. படுக்கைகள் போட்டாகி விட்டன. ஆயுதங்களும் வாங்கியாகி விட்டன. நோயாளிகளும் வரத் தொடங்கி விட்டார்கள். இந்தப் புற்று நோய் சிகிச்சை செய்யக் கூடிய விசேஷப் படிப்பும் ஆராய்ச்சியும் பெற்றுள்ள டாக்டர்களும் இருக்கின்றனர். ஆனால் அவர்களுக்குச் சம்பளம் ஏராளமாகக் கொடுக்க வேண்டியிருக்குமே. இந்திய மாதர் சங்கத்தினர் அவ்வளவு பணம் எங்கிருந்து கொடுக்க முடியும்!

இவ் விஷயத்தில் இந்த வைத்திய சாலைமிகுந்த அதிர்ஷ்டம் வாய்ந்தது என்று சொல்ல வேண்டும்.

மிகுந்த படிப்பும் ஆராய்ச்சியும் பொதுஜன செல்வாக்கும் பெற்ற 14 டாக்டர்கள் இந்தப் புற்று நோய் வைத்திய சாலையில் இலவசமாகப் பணி புரிந்து வருகிறார்கள். இந்த டாக்டர் குழுவின் தலைவராக டாக்டர் பி. அருணாசலம் இருந்து வருகிறார். அவர்தான் இந்த வைத்திய சாலையின் நிர்வாகப் பொறுப்பையும் ஏற்றுத் திறம்பட நடத்தி வருகிறார்.

டாக்டர் குழுவின் ஜாபிதாவைப் பார்த்தேன். ஒவ்வொரு டாக்டரும் நல்ல வருமானம் பெறுபவர்கள். ஏன், வருமானம் வரும் இடங்களுக்கே போக முடியாத அளவுக்குச் சதா வேலையுடன் இருப்பவர்கள். இவர்கள் எப்படியோ இந்த இன்ஸ்டிட்யூட்டில் வேலை செய்யவும் தங்கள் நேரத்தை ஒதுக்குகிறார்கள் என்று கேள்விப்பட்டபோது அவர்களது உன்னத சேவை உணர்ச்சியை எண்ணி வியக்காமலிருக்க முடியவில்லை.

* * *

இப்படியே இவர்கள் என்றும் வேலை செய்வார்கள் என்று எதிர்பார்க்கலாமா! இந்த வைத்தியசாலைக்கென்று பிரத்தியேகமாகப் பெரிய கான்ஸர் டாக்டர்கள் ஏற்படுத்திக்கொள்ள வேண்டாமா! அவர்களுக்குச் சம்பளம் கொடுக்கத் தக்கபடி நிதி நிலைமை உயர வேண்டும் அல்லவா! "அதற்கும் பொதுஜன உதவியைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்" என்றார் டாக்டர் அருணாசலம்.

தற்சமயம் இந்த ஆஸ்பத்திரியில் இருபது படுக்கைகள்தான் இருக்கின்றன. ஆனால் இன்னும் இருபத்தைந்து படுக்கைகள் ஏற்படுத்திக் கட்டடத்தை விஸ்தரிக்க வேண்டும். இதற்கும் நிதி வேண்டும் என்கிறார் டாக்டர் அருணாசலம்.

கான்ஸர் நோயைக் குணப்படுத்த மூன்று வைத்திய முறைகள் உண்டு. அவை தனித் தனி

ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் செல்யூலோஸ் பிலிம்

# சரக்குகளைக் காப்பாற்றுகிறது...
# விற்பனையைப் பெருக்குகிறது!

உங்கள் சரக்குகள் சாமான் வாங்குபவர்களால் பார்க்கப்பட்டால் தான் விற்பனையாகும். ட்ரான்ஸ்பெரன்ட் செல்யூலோஸ் பிலிம் பாக்கிங் கண்ணைக் கவருகிறது...பார்த்த உடனேயே சாமான்களின் தரத்தை எடுத்துக் காட்டுகிறது...... விற்பனையும் எளிதாகி விடுகிறது!

மேலும் நல்ல பாதுகாப்பும் கூட! ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் செல்யூலோஸ் பிலிம் தூசி, அழுக்கு, ஈரம் உட்புகாமல் சரக்குகளைக் காப்பாற்றுகிறது... விற்பனையாகும் வரை அவைகளை புத்தம் புதிதாக வைத்திருக்கிறது.

*வியாபாரப் போட்டி நிறைந்த மார்க்கெட்டில் விற்பனையை அதிகரிக்க இந்த அருமையான சாதனம் இன்றியமையாதது. இலவச சாம்பிள்களுக்கு இன்றே எழுதுங்கள்.*





TRAYONS

## ட்ரான்ஸ்பெரன்ட்
## செல்யூலோஸ் பிலிம்

*கண்ணைக் கவருகிறது...விற்பனையை துரிதமாக்கிறது!*

# தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிமிடெட்

பாக்டரி: ரேயான்புரம், திருவாங்கூர்–கொச்சின்.
ஸேல்ஸ் ஆபீஸ்: யுனைடெட் இந்தியா லைப் பில்டிங்ஸ், மதறாஸ்-1.
மானேஜிங் ஏஜெண்ட்கள்: எம்சிடி & ஸன்ஸ் (திருவாங்கூர்) லிட்.,

TR 558

மதராஸ் ஸ்டாக்கிஸ்டுகள்:

ரேயான் டிரேடெர்ஸ் லிமிடெட், 27, பவழக்காரத் தெரு, சென்னை -1

(கிளை ஆபீஸ்கள்: மதுரை, சேலம், கோயமுத்தூர்)

பெங்களூர் ஸ்டாக்கிஸ்டுகள்:

மெஸர்ஸ் எச். கப்பண்ணா & சன்ஸ், டாட்பேட், பெங்களூர்

யாகவோ, அல்லது இரண்டொரு முறை கூட்டாகவோ நடத்த வேண்டும். அதாவது 1. எக்ஸ்ரே முறை, 2. ரேடியம் முறை 3. சஸ்திர சிகிச்சை.

எக்ஸ்ரே முறையில் வைத்தியம் செய்ய இன்றைய உலகிலே கிடைக்கக் கூடிய மிக உயர்ந்த எக்ஸ்ரே யந்திரங்களை இங்கே வாங்கி உபயோகித்து வருகிறார்கள். அது வரைக்கும் நாம் சந்தோஷப்பட வேண்டும். சஸ்திர சிகிச்சைக்கான உபகரணங்களும் பெற்றிருக்கிறார்கள். ஆனால் இன்னும் ரேடியம் முறைக்கான யந்திரங்களைத்தான் வாங்கவில்லை. அவை வாங்க லட்சக்கணக்கான ரூபாய் தேவைப்படுகிறது. அதற்கும் நிதி திரட்ட வேண்டியிருக்கிறது.



சஸ்திர சிகிச்சை செய்யப்படும் ஆபரேஷன் தியேட்டர்.

இப்படி இந்த ஆஸ்பத்திரியின் தேவைகளைக் கருதி டாக்டர் பி. அருணாசலம் அவர்கள் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தின் கீழ் இதற்கு 15 லட்சம் ரூபாய் ஒதுக்கும்படி மத்திய சர்க்கார் திட்டக் கமிஷனைக் கோரியிருந்தார். சர்க்கார் ஐந்து லட்சம் ரூபாய்தான் ஒதுக்கி யிருக்கிறார்களாம். மிகுதி தர்ம சிந்தையுள்ள பொது ஜனங்கள் உதவுவார்கள் என்ற நம்பிக்கை டாக்டர் அருணாசலத்துக்கு இருக்கிறது. மாதர் சங்கத்தினருக்கும் இருக்கிறது.

* * *

இவ்விவரங்களையெல்லாம் டாக்டர் அருணாசலம் சொல்லி வந்தபோது, "ஆம்! இந்தப் பயங்கரப் புற்று நோய் எப்படி ஏற்படுகிறது! என்ன காரணத்தினால் ஏற்படுகிறது!" என்று கேட்டேன்.

"அதுதான் தெரியவில்லை" என்றார்.

ஏதோ கிருமி மூலம் நதி மூலம் இவை இரண்டு தான் தெரிய முடியாது என்று நினைத்தேன். அவற்றுடன் கான்ஸரையும் சேர்த்து விட வேண்டியதுதான் போலிருக்கிறது.

இந்த வியாதி கிருமிகளினால் ஏற்படுவதல்ல. ஒருவரிடமிருந்து ஒருவருக்குத் தொற்றக் கூடியதுமல்ல. ஆயினும் இந்த வியாதி மக்களுக்கு ஆண் பெண் என்ற பேதமின்றியும் ஏழை பணக்காரன் என்ற வித்தியாசமின்றியும், வெள்ளை கறுப்பு என்ற நிறபேதமின்றியும் வருகிறது. இந் நோயின் ஆரம்ப நாட்களில் வலியே இருப்பதில்லை. பிறகு புண்ணாகி மனிதனுக்குத் தீராத வலியை உண்டாக்கி உயிரையே வாங்கி விடுகிறது. மரணம் எத்தனையோ நோய்களின் காரணமாக ஏற்படுகிறது. ஆனால் அப்படி இறப்பவர்கள் ஒன்பது பேரில் ஒருவர் இப்புற்று நோயின் காரணமாக இறக்கிறார்கள் என்றால் இந்நோயின் வியாபகத்தைப் புரிந்துகொள்ளலாம். மேலும் 1949 வரை இந் நோய் குணப்படுத்த முடியாத நோய் என்றே கருதப்பட்டு வந்தது. 1949ல் தான் இந்நோய் நிச்சயமாகக் குணப்படுத்தக் கூடியதுதான் என்று நிரூபணமாயிற்று.

இந்நோய் குணப்படுத்தும் வைத்திய முறையில் எக்ஸ்ரே முறை மிக முக்கியமானது. புற்றுநோய் வந்த பிரதேசத்தில் எக்ஸ் கிரணத்தைச் செலுத்திக் குணப்படுத்துகிறார்கள். இந்த எக்ஸ் கிரணத்தை ராண்ஜன் என்ற ஜெர்மன் விஞ்ஞானி 60 ஆண்டுகளுக்கு முன் (1895-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 8-ம் தேதி) கண்டு பிடித்தார். அது வைத்திய உலகில், புற்று நோய் குணப்படுத்துவதில் பெரியதோர் வரப்பிரசாதமாக விளங்குகிறது! ஆகவே அகில உலகிலும் எக்ஸ்ரே கண்டுபிடிக்கப்பட்ட அந்த 60-வது வருஷத் திருநாளைப் பொன் விழாவாகக் கொண்டாடுகிறார்கள். இந்த டிசம்பர் மாதம் சென்னையிலும் கான்ஸர் எதிர்ப்பு வாரத்தை யொட்டிக் கொண்டாடப் போகிறார்கள்.

* * *

"கான்ஸர் எதிர்ப்பு வாரமா! இது என்ன புதிதாக இருக்கிறதே!" என்று நினைக்கலாம்.

ஆனால் இது 'வார விழா' கொண்டாடும் யுகம். பணம் சேமிக்க வேண்டுமா! அப்படியானால் சேமிப்பு வாரம் என்று ஏழுநாட்கள் நாடகம் நாட்டியம் முதலியவற்றுடன் கொண்டாடப்படும். சமீபத்தில் கைத்தறி வாரம், குடிசைத் தொழில் வாரம் என்றெல்லாம் கொண்டாடப் பட்டதைப் பார்த்தோம். அப்படியே கான்ஸர்-புற்றுநோயைப் பற்றிப் பொது மக்களுக்கு உணர்த்தவும், இன்ஸ்டிட்யூட்டுக்கு நிதி திரட்டவும் புற்றுநோய்க் கண்காட்சி, நாடகங்கள் பிரசங்கங்கள் ஆகியவை ஒரு வாரத்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

கடைசியாக ஒரு வார்த்தை. மிகப் பயங்கர நோயாக இருந்த இந்தப் புற்று நோயை இன்றைய வைத்திய உலகம் வென்றுவிட்டது.

ஆகவே இனி யாரும் புற்று நோயைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. இந்நோயைப் பற்றி அவர்கள் கூறும் ஏழு அறிகுறிகளில் ஏதாகிலும் ஒன்றைக் கண்டால் உடனே அடையாறு புற்றுநோய் வைத்தியசாலைக்குச் சென்று புற்று நோய்தானா இல்லையா என்று தெரிந்து கொண்டு, புற்று நோயானால் அங்கே வைத்தியம் செய்துகொண்டு ஆரோக்கியமாக வாழுங்கள்! எந்தப் புண்ணும் ஆறவில்லை என்றால் கர்மவினை என்று சும்மா இராதீர்கள்! அடையாறுக்குச் செல்லுங்கள். விதியை மதியால் வெல்ல முயலுங்கள்!

# படித்துப்பாருங்கள்

## பி. ஸி. ஜி ஏன் கூடாது என்கிறேன்?

தினம் காலையில் பத்திரிகையைப் பிரித்தால் பி. ஸி. ஜியைப் பற்றிப் பல நிபுணர்கள் அறிக்கை விட்டுக் கொண்டே இருக்கிறார்கள். ராஜாஜி அவர்கள் பி. ஸி. ஜி ஊசி குத்துவதால் ஏற்படும் கெடுதல்களைப் பற்றிச் சாங்கோபாங்கமாக, காரண காரியங்களுடன் விளக்கி விவரமாகக் கூறி வருகிறார்கள். அவர்கள் கூறிய விஷயங்கள் முழுதும் அப்படியே பத்திரிகைகளில் வெளி வருவதில்லை. அப்படி வந்த விஷயங்களையும் எல்லாரும் சேகரித்து வைக்க முடிவதில்லை. அதனால் ராஜாஜி அவர்களே பி. ஸி. ஜி ஆட்சேபனைகளைத் தொகுத்து ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டார்கள்.

ஆங்கிலம் படித்த பெரியவர்களுக்காக ராஜாஜி எழுதிய பி. ஸி. ஜி எதிர்ப்பு நூலை "பி. ஸி. ஜி ஏன் கூடாது என்கிறேன்" என்ற பெயரில் திரு எஸ். வி. எஸ். தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார். மிகவும் நுட்பமான மருத்துவ சம்பந்தமான ஆங்கிலப் பதங்களைத் தமிழ் மட்டும் தெரிந்தவர்கள்கூடப் புரிந்துகொள்ளும் வண்ணம் மொழிபெயர்த்திருக்கிறார். அவருடைய சக்தி வாய்ந்த தமிழ் பி. ஸி. ஜி ஊசிகுத்து எவ்வளவு கொடூரமானது என்பதை மிகத் தெளிவாகக் காட்டுகிறது.

புத்தகத்தைப் படிக்கும்போது ஏதோ மருத்துவ சம்பந்தமான ஒரு நூலைப் படிக்கிறோம் என்பதே தெரியாமல் விஷயங்கள் தடங்கல் இல்லாமல் செல்லும்படி மொழிபெயர்த்திருக்கிறார் திரு எஸ். வி. எஸ். பிள்ளைகளைப் பெற்ற பெற்றோர்களும், மருத்துவம் தெரிந்த தமிழ் வைத்தியர்களும், ஆங்கில வைத்தியம் தெரிந்த டாக்டர்களுங் கூடப் படித்துப் பயன் பெற வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன.

கிடைக்குமிடம்: தமிழ் நூல் பிரசுராலயம், 2, மெமோரியல் ஹால் தெரு, சென்னை-3. விலை அணா ஆறு.

## பாலகாண்டம் (வால்மீகி ராமாயணம்)

பாரத தேசத்தின் பழம் பெருமையின் கருவூலமாக விளங்கும் மாபெரும் இதிகாசம் ராமாயணம். ஆதியில் அதை வடமொழியில் இயற்றியவர் ஸ்ரீ வால்மீகி. அற்புதமான அந்த அமர காவியம் பொன்றாப் புகழுடன் இன்றும் விளங்குகிறது. எல்லா மொழிகளிலும் பயின்று வந்திருக்கும் பாரகாவியம் அது.

ஸ்ரீ டி. எஸ். ராகவன் அவர்கள் ஏற்கனவே, அரண்ய காண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம் ஆகியவற்றைத் தெள்ளிய தமிழில் மொழிபெயர்த்து உதவியிருக்கிறார். ஏனைய காண்டங்களைப் போலவே பால காண்டமும் சுவை குன்றாமல் மொழி பெயர்த்து எழுதப்பட்டிருக்கிறது. வடமொழி அறியாதவர்களும்கூட வால்மீகி ராமாயணத்தைப் படித்துப் பயனடையுமாறு, மூலத்தினின்றும் பிறழாமல், சுவையுள்ள தமிழில், எளிய நடையில் எழுதியிருப்பது பாராட்டுக்குரியது.

"உலகம் உய்விக்க வந்த உத்தமன் எவன்! இரங்கலில் எழுந்த இன்னிசை, மனத் திரையில் உயிரோவியம், கற்கனியக் கனிகின்ற கருணை கானம், குணமென்னும் குன்றேறி நின்றார் வந்தார்..." முதலிய அத்தியாயப் பிரிவுகளின் தலைப்புகளைப் படிக்கும் போது மொழி பெயர்ப்பு ஆசிரியரின் தமிழ் அறிவு சிறப்பாக வெளியாகிறது.

கிடைக்குமிடம்: டி. எஸ். ராகவன், 21, மந்தை வெளி தெரு, சென்னை 28. விலை ரூ. 3-8-0.

## திருக்கைவளம் (மூலமும் உரையும்)

நம் தமிழகத்தில், மணி முடி தரித்து மாநிலம் புரந்த மன்னர்கள் பெருமையைக் கூறப் புகுந்தால், வன்னியர் மரபைப் பற்றிக் கூறாதிருக்க முடியாது. அத்தகைய வன்னிய மன்னர்களின் சிறப்பைக் கடல்மாநகரம் இருவாட்சிப் புலவர் என்னும் பண்டை காலப் புலவர் கலிவெண்பாவில் மிகவும் அழகாகப் பாடியிருக்கிறார். வன்னியர் மரபின் சீரும் சிறப்பும் விவரமாக விளக்கப்படுகின்றன.

"நன்னு வலர்புகழ நான்மறைகளும் பரவ
என்னாளும் பொற்சிலையை ஏந்துங்கை"

.....................................................................

"மாற்றலரை வென்று மதகரியின் மீதேறி
நாற்றிசையும் வில்லுவசம் காட்டும் கை"

இம் மாதிரி வீர வன்னியர் மரபின் வளம், வளமான தமிழில் கூறப்படுகிறது.

இப் பண்டை நூலுக்கு உரை யெழுதப் புகுந்த திருவாளர் பு. பா. இரத்தினசபாபதி நாயகர், தமது உரையை அரியதோர் ஆராய்ச்சி நூலாகச் செய்து விட்டார். காஞ்சிபுரம், திருவண்ணாமலை, சிதம்பரம், ஜம்புகேசுவரபுரம், மதுரை, ஸ்ரீரங்கம், வைத்தீசுவரன் கோயில் ஆகிய சிவ தலங்களிலும், மற்றுமுள்ள பல பகுதிகளிலும் வன்னியர் குலம் செழித்து வாழ்ந்திருந்ததற்குச் சான்று கூறும் செப்பேடுகளும், சிலா சாஸனங்களும் இந்நூலில் இடம் பெற்றிருக்கின்றன.

பல்லவர் பிரபாவம் என்னும் பகுதியில் பல்லவ வம்சத்தின் பெருமை சரித்திரச் சான்றுகளோடு விளக்கப்படுகின்றது.

வெளியிட்டவர்: ஆ. சுப்பிரமணிய நாயகர், பெரம்பூர் பாரக்ஸ், சென்னை-12. விலை: அணா 8.

எவ்வயதிலும்
எந்த
நிலைமையிலும்




# இருமலை
# பெர்ட்டுஸின்
"டெஷ்னர்"
# நிறுத்துங்கள்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.

இடாஷ்னர் லிமிடெட், ஷான், லிச்சென்ஸ்டீன் ஸ்விஸ் கஸ்டம் அன்டு இகனாமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில்

இன்பா லிமிடெட் தபால் பெட்டி 1041, பம்பாய்-1 இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

# கால்கேட் குளோரோபில்*

# ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்து கிறது!**

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப் பலப்படுத்துகிறது.

வேறு சாதாரண பற்பசையை விட மிகமிகத் தீவிரமாக வாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொருமுறையும், சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனுமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற்பசையிலும் இதைவிட வீரிய குளோரோபில் இல்லை**

குழந்தைகள் விரும்பும் மதுரமான சுவை. மதுரமான இனிய சுவையுள்ள கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை குழந்தைகள்கூட விரும்புவார்கள்.




**குளோரோபில் டூத்பேஸ்டின் பூரண-நன்மைகளைத்தரும் விசேஷ கால்கேட் சூத்திரம்!**

* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

CTPA/6/5

# சிக்குக் கோலம்

சம்பந்தம்

★

அது மார்கழி மாதம்; புலர்ந்தும் புலராக் காலைப் பொழுது. அந்தத் தெரு முழுவதுமே ஒவ்வொரு வீட்டு வாசலுக் கெதிரே மண் தரையைப் பெருக்கிச் சாணம் தெளித்துப் பெரிய பெரிய கோலங்களைப் போட்டுக் கொண்டிருந்தார்கள். கலாமணி யும் அடுக்கு அடுக்காகப் புள்ளி வைத்து வளைத்து வளைத்து இழுத்துக் கொண்டிருந் தாள். அவள் இத்தனைகாலும் எத்தனையோ இலையும் பூவுமான கோலங்க ளெல்லாம் போட்டிருக்கிறாள். அன்று எல்லோரை யும் விடச் சற்று முன்பே எழுந்து பெரிய சிக்குக் கோலமாகப் போட ஆரம்பித்து விட்டாள். சீக்கிரத்தில் புள்ளியை எண்ணிக் கொண்டு ஒருவராலும் போட முடியாத கோலம் அது. கலா கோலம் போட்டு முடிப் பதற்கும், பூக்காரி பூசணிப் பூ கொண்டு வந்து போடுவதற்கும் சரியா யிருந்தது.

அவசர அவசரமாகச் சாணி உருண்டை பண்ணிக் கொண்டு வந்தாள் கலாமணி. அதே சமயத்தில் மாடிக் கைப்பிடிச் சுவ ரண்டை சிறு கனைப்புச் சத்தம் கேட்டது. தன் கணவன் மூர்த்தி கோலத்தை எட்டிப் பார்க்கிறான் என்பதை நிமிர்ந்து பார்க்கா மலே தெரிந்து கொண்டாள் கலா. உடனே ஒருவித இன்ப உணர்ச்சி பரவிற்று அவள் உள்ளத்தில். இனிய இலேசான குரலில் இராகம் இழுத்துக் கொண்டே, பூசணிப் பூக்களைச் சாணி உருண்டையில் செருகப் போனாள்.

"கலா!" என்று கத்தினான் மூர்த்தி மாடியிலிருந்து. அந்தக் குரலில் என்று மில்லாத ஒருவித ஆத்திரம் குமிழி யிடு வதைக் கண்டு கலாமணி திகைத்தே போனாள். உடனே தன் புடவைத் தலைப்பை முறுக்கிக் கொண்டே ஆழ்ந்த யோசனையோடு மாடிப்படி ஏறிச் சென்றாள்.

வதனத்தில்சோகச்சுடர் படரச் சாய்வு நாற் காலியில் உட்கார்ந் திருந்தான் மூர்த்தி. ஆழ்ந்த பெருமூச்செறி வதையும், அவனது கண் களின் கடையோரங்களில் முத்துப் போல் கண்ணீர் துளித் திருப்பதையும் கண்ட கலாமணி யின் மனம் சஞ்சல மடைந்தது.

"கலா! இந்தக் கோலந்தானா உனக்குப் போடத் தெரியும்?" - அவன் குரலில் துயரத்தின் சாயை தொனித்தது.

"இல்லை. தினம் ஒரு தினுசாக இருக் கட்டுமே என்று போட்டேன்!"

"முதல் நாளும் இதே கோலத்தைத் தானே சிறிதாகப் போட்டிருந்தாய்?"

"ஆமாம்!" என்றாள் அவள்.

"அன்று மாடியிலிருந்து தண்ணீர் கொட்டிக் கோலம் அழிந்து போய் விட்டதே, ஞாபகமிருக்கிறதா?"

"ஆமாம். பெரிய குடத்திலிருந்த தண் ணீர் சாய்ந்து விட்டதாகச் சொன்னீர்கள்."

"தண்ணீர்க் குடமா சாய்ந்தது? நானே தான் தண்ணீரைக் கொட்டிக் கோலத்தை அழித்தேன்!" என்றான் அவன்.

"என்ன?" என்றாள் வியப்புடன்.

"உம்" என்று பெருமூச்சுவிட்ட அவன், "இன்று நினைத்தால் கூடக் குமுதா என் னெதிரே வந்து நின்று சிரிப்பது போலிருக் கிறது" என்று கூறினான்.

"குமுதாவா! யார் அது?"

கலாமணியின் குரலில் பதட்டமும் பர பரப்பும் குமிழி விட்டன.

"ஆம். குபேரா பாங்கி மானேஜராக அவள் அப்பா இந்த ஊருக்கு மாற்றலாகி வந்தார். எதிர் வீட்டில்தான் குடி இருந் தார் அவர். குமுதா அவருக்கு ஒரே பெண்; செல்லப் பெண்!"

"கூடப் பிறந்தவர் ஒருவருமே அவளுக் குக் கிடையாதாக்கும்!"

"ஊஹூம். கிடையாது!"

மூர்த்தி சற்றுத் தயங்கினான்.

"என்ன, நிறுத்தி விட்டீர்கள்? மேலே சொல்லுங்கள்!" என்றாள் கலாமணி.

மூர்த்தி தொடர்ந்தான்: "அன்று கார்த் திகைத் திருநாள். நம் வீட்டு வாசல் நிறைய அம்மா வரிசை வரிசையாக அகல் விளக்கு ஏற்றி வைத்திருந்தாள். குமுதாவும் போட்டி போட்டுக் கொண்டு, தன் வீட்டு வாசலிலும் நிறைய அகல் விளக்கு ஏற்றி வைத்தாள். சற்று நேரத்துக் கெல்லாம் அம்மா என்னிடம் விளக்குகளைப் பார்த்துக் கொள் ளச் சொல்லி விட்டுக் கோவி லுக்குப் போய் விட்டாள்.

காற்றில் அவள் வீட்டு விளக்குகள் இங்கொன் றும் அங்கொன்று மாக அணைய ஆரம்பித் தன. அவ்வப்பொழுது குமுதா கைவளைகள் கல கல வென்று ஒலிக்க, ஓடி அணைந்த விளக்குகளை ஏற்றி னாள். ஒன்றை ஏற்றினால் இன் னொன்று அணைந்து விடும். அதைக் கண்ட எனக்குச் சிரிப்புச் சிரிப்பாக வந்தது. குமுதா தன் முகத்தை வெடுக் கென்று திருப்பி என்னைக் கோபத்துடன் பார்த்தாள். வருவதற்காக உள்ளே சென்று விட்டாள்.

★

சற்று நாழிகைக் கெல்லாம் இலேசான பலத்த காற்று வீசவே, நம் வீட்டு விளக்கு களிலும் பாதிக்கு மேல் அணைந்து விட்டன. நான் ஒவ்வொன்றாக ஏற்றி

விட்டுத் திரும்புவதற்குள் காற்று விளக்குகளை அணைத்துக் கொண்டே வந்தது. குமுதாவுக்குச் சந்தோஷம் நிலை கொள்ளவில்லை. 'கொல்' என்று சிரித்து விட்டாள்.

'ரொம்பச் சிரிக்காதே, குமுதா! பல் சுளுக்கிக் கொள்ளப் போகிறது' என்று சொன்னேன்.

'உங்களுக்கு மாத்திரம் பல் சுளுக்கிக் கொள்ளாதோ? என்னைச் சொல்ல வந்து விட்டீர்களே!' என்றாள் குமுதா. அதைக் கேட்ட எனக்குச் சிரிப்பு வந்தது.

அன்று முதல் நாங்கள் இருவரும் சகஜமாகப் பழக ஆரம்பித்தோம். குமுதாவும் அடிக்கடி நம் வீட்டுக்கு வர ஆரம்பித்தாள். நான் ஹாக்கி, கிரிக்கெட்டு விளையாட்டுக்களில் எல்லாம் பரிசு பெற்ற வெள்ளிக் கோப்பைகள் அனைத்தையும் எடுத்துப் பார்த்துத் துடைத்து வைப்பாள். இதோ இந்த நிலைப்படிக்கு மேல் தொங்கும் ஜாலங்கள் அவளது கைவேலைதான்!"

"அப்படியா? வெகு நேர்த்தியாயிருக்கின்றனவே!"

"நானும் ஒழிந்த வேளையில் ஒரு தடவை அவள் வீட்டுக்குச் சென்றிருக்கிறேன். அவள் படிக்கும்பொழுது பரிசு வாங்கின புத்தகங்களை யெல்லாம் எடுத்து எனக்குக் காட்டினாள்; எல்லா வகுப்பிலும் அவளுக்குத்தான் முதற் பரிசு!"

"எல்லா வகுப்பிலுமா?" என்று வாயில் ஊறின எச்சிலைக் கூட்டி விழுங்கிக் கொண்டே கேட்டான் கலாமணி.

"ஏதோ ஒரு தடவை இரண்டாவது பரிசு வாங்கினாள் போல் தெரிகிறது. அவள் 'எம்பிராய்டரி' வேலைகளை யெல்லாம் எடுத்துக் காட்டினாள். அழகு அழகான பட்டாம் பூச்சிகள் உயிருள்ளவை போல், அவளுடைய மேஜை விரிப்பிலும் சோபா உறையிலும் பறந்து கொண்டிருந்தன. எல்லாவற்றையும் விட ஒரு பெரிய கோட்டுப் புத்தகத்தைப் பிரித்துக் காண்பித்தாள். ஆஹா! அதில்தான் எத்தனை நவ நவமான கோலங்கள்! நான் அவற்றைப் பார்த்து அப்படியே மலைத்துப் போய் விட்டேன்.

கார்த்திகை மாதம் முடிந்து மார்கழி பிறந்தது. குமுதா தினந் தவறாமல் வாசலுக் கெதிரே மண் தரையில் அந்தப் புத்தகத்திலிருந்த பெரிய கோலங்கள் அத்தனையும் போட ஆரம்பித்தாள். நம் வீட்டுக்கும் அவளேதான் கோலம் போட்டு வந்தாள்.

நான், இப்பொழுது போலவே அப்பொழுதும் அதிகாலையில் எழுந்து விடுவேன். உடனே நேரே கைப்பிடிச் சுவரண்டை வந்து குமுதாவின் கோலத்தின் முகத்தில்தான் கண் விழிப்பேன். கைவளைகள் கல கல வென்று குலுங்க, இடுப்பி




லிருக்கும் பட்டுப் புடவை சர்சர்என்று சப்திக்க, தலைப் பின்னல் இந்தப் புறமும் அந்தப் புறமும் வந்து தொங்கக் குமுதா குனிந்து கோலம் போடுவது, கை தேர்ந்த நடன மாது ஒருத்தியின் அற்புத நடனத்தை விட மேலானதாக இருக்கும்.

ஐந்தாறு நாட்களில், சாதாரணக் கோலங்களை போட்டு வந்த ஒவ்வொருவர் வீட்டு வாசலிலும் குமுதாவின் கோலங்கள் பூத்துக் கிடந்தன. ஜாடைமாடையாகப் புள்ளிகளை எண்ணிக் கொண்டு போய் அவரவர்கள் தங்கள் தங்கள் வீட்டு வாசலில் அந்தக் கோலங்களை யெல்லாம் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஒருநாள், 'குமுதா! நீ முந்தா நாள் போட்ட கோலத்தை இன்று முதல் வீட்டில் போட்டுக் கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறதே!' என்றேன்.

'இந்த ஊரிலேயே எல்லோருக்கும் காப்பியடிக்கத்தான் தெரியும் போலிருக்கிறது!' என்றான்.

'ஆமாம், கோலத்தின் நடுவில் நீ புள்ளிகளுக்கு ஏற்றாற் போல் 'குமுதா' என்று போட்டுக் கொள்கிறாயே! அதையும் அப்படியே காப்பியடித்துக் கொள்கிறார்கள்!' என்றேன் சிரித்துக்கொண்டே.

அதைக் கேட்டுக் கலகல வென்று சிரித்தான். நானும் சேர்ந்து கருதி கூட்டிடினேன். 'ஏன், குமுதா! ஒருவராலும் புள்ளியை எண்ணிக் காப்பியடிக்க முடியாத கோலமாக உனக்குப் போடத் தெரியாதோ?' என்று கேட்டேன்.

அன்று இரவு கண் விழித்த பொழுது எதிர்வீட்டு வாசலில் 'வருக், வருக்' கென்று பெருக்கும் சப்தம் கேட்டது. மணியைப் பார்த்தேன். மூன்றரை கூடச் சரியாக ஆக வில்லை. அதற்குள்ளாகவா குமுதா கோலம் போடத் தொடங்கி விட்டான்? கைப்பிடிச் சுவரண்டை சென்று பார்த்தேன். நிர்மலமான நீல வானத்திலிருந்து பொழிந்து கொண்டிருந்த குளுமையான வெண்ணிலவிலே நகரம் முழுவதுமே நனைந்து கொண்டிருந்தது. வெளியே பரவிக் கிடந்த பனிப்படலத்தைத் துளைத்துக் கொண்டு வீசிய குளிர் காற்று ஊசி போல் என் உடலைத் தாக்கி மெய்சிலிர்க்கச் செய்தது. குளிரில் பற்கள் ஒன்றோடொன்று அடித்துக் கொண்டன. 'குமுதா!' என்று கூப்பிட்டேன்.

'ஏன்! அதற்குள் தூக்கம் கலைந்து போச்சா, என்ன?' என்று தலை நிமிர்ந்து கேட்டான் அவன்.

'நீ ஏன் இப்படி இதற்குள் எழுந்து கோலம் போடத் தொடங்கி விட்டாய்?'

'இன்றைக்கு ஒரு பெரிய சிக்குக் கோலம் போடப் போகிறேன். புள்ளியை எண்ணிக் கொண்டு ஒருவராலும் போட முடியாத கோலம் இது. இந்த ஊரில் தான் காப்பியடிப்பது என்பது வழக்கமாகப் போய் விட்டதே!'

'ஏ கோலம் போடும் பித்துக் குமுதா! கொட்டும் பனியில் இப்படி வெறுந் தலையோடு இருக்கிறாயே! ஒரு துணியை யெடுத்துத் தலைக்குக் கட்டிக் கொள்ளக்கூடாதோ?' என்று கேட்டு விட்டு நான் படுத்துக் கொள்ளப் போய் விட்டேன்.

நான் வழக்கப்படி எழுந்திருந்து வந்து பார்த்த பொழுது கூடக் குமுதா கோலம் போட்டுக் கொண்டிருந்தான். நகக் நகக்கென்று நாலு தும்மல் தும்மிக் கொண்டே போட்டு முடித்து விட்டு என்னை நிமிர்ந்து பார்த்தான். அவன் முகத்தில் என்றுமில்லாத ஒரு விதத் திருப்தி ததும்பியது.

அன்று வழக்கத்தை விட அதிகமாகக் கூட்டம் போட்டுக் கோலத்தைப் பார்த்து மகிழ்ந்தார்கள் ஜனங்கள்.

அன்று மாலை நான் குமுதா வீட்டுக்குப் போன பொழுது, தலையில் மப்ளரைக் கட்டிக் கொண்டு படுக்கையில் படுத்திருந்தான். 'என்ன குமுதா, இது?' என்றேன் ஆச்சரியத்தோடு. பீதியும் தொனித்தது என் குரலில்.

'கொஞ்சம் சுரம் மாதிரி யிருக்குது; அம்மா படுத்துக் கொள்ளச் சொல்லி விட்டாள்' என்றான். நான் அவன் நெற்றியில் கை வைத்துப் பார்த்தேன். நன்றாகக் கொதித்தது. அன்றிரவே டாக்டர் வந்தார்; மருந்தும் மாத்திரையுமாகக் கொடுத்து விட்டுப் போனார்.

மறுநாள் அதிகாலை. குமுதா வீட்டில் ஒரு கோலத்தையும் காணோம். கிழக்கும் வெளுத்து விட்டது. நேரம் ஆக ஆகக் கீழ்த் திசையில் பிரகாசமும் பெருகச் சுடன் பரவியது. அப்பொழுதுதான் எதிர் வீட்டு மாமி வந்து குறுக்கும் நெடுக்குமாக நாலே நாலு கோடுகள் இழுத்து விட்டு உள்ளே போனாள்.

அதற்கு மறுநாள் எல்லாருடைய வீட்டு வாசலிலும் கோலம் போடப் பெருக்கிக் கூட்டும் சப்தம் கேட்டது. ஆனால் குமுதா, தான் போட்டிருந்த சிக்குக் கோலத்தின் சுவடு கூடச் சரியாக மறையாமலிருக்கும் போதே மறைந்து விட்டான்."

மூர்த்தி கதையைக் கூறி முடித்தான். அப்பொழுது அவன் கண்களில் தேங்கி நின்ற கண்ணீர் பொல பொலவென்று கீழே உதிர்ந்து விழுந்தது.



தஞ்சாவூர் ஜில்லா நன்னிலத்தைச் சேர்ந்த நல்ல மாங்குடியில் மேற்கு முகமாக எழுந்தருளியிருக்கும் வரப் பிரசாதரான ஸ்ரீ சித்தி விநாயகர் ஆலயத்தின் மகா கும்பாபிஷேக வைபவம் அக்டோபர் 30ந் தேதி ஏராளமான பக்தர்கள் சூழ வெகு விமரிசையாக நடந்தேறியது. அதை யொட்டிச் செம்பொன்னூர் கோவில் ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளை குழுவினரின் நாகஸ்வரக் கச்சேரியும், ஸ்ரீ சுப்பிரமண்ய தீட்சிதர், காப்பணு மங்கலம் ஸ்ரீ சரவணபவ சாஸ்திரிகள் முதலிய பாகவத சிரேஷ்டர்களின் உபன்யாசங்களும் நடைபெற்றன. மண்டலாபிஷேகத்தை முன்னிட்டு லக்ஷார்ச்சனைகளும் சிறப்பாக நடந்து வருகின்றன.

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

மூர்த்தி பேசி முடிக்கும் முன்பே கலாமணியின் மனம் பரபரப்புற்றது. அவனுடைய துயரம் படர்ந்திருந்த முகமும் சோகம் ததும்பிய பேச்சும் அவளது கரிய விழிகளிலும் கண்ணீரை வருவித்தன.

"நீங்கள் சொல்வதிலிருந்து இவன் என் தோழி குமுதாதான் என்று தோன்றுகிறது. இந்தச் சிக்குக் கோலம் போட அவளிடந்தான் நான் கற்றுக்கொண்டேன். அப்பொழுது அவள் அப்பா எங்கள் ஊரில் பாங்கி மானேஜரா யிருந்தார்!" என்றாள்.

"அப்படியா?" என்று சொல்லிக் கொண்டே மூர்த்தி தன் அறைக்குள் ஓடி அவசர அவசரமாகத் தன் உடுப்புப் பெட்டியின் அடியில் மறைத்து வைத்திருந்த குமுதாவின் படத்தை எடுத்துக் கொண்டு வந்தான்.

அதைக் கையில் வாங்கிப் பார்த்ததுதான் தாமதம், கலாமணிக்கு உயிரே போவது போலிருந்தது. "இவளே தான்" என்றான் அவன். அதற்குமேல் சரியாகச் சொற்கள் அவன் வாயிலிருந்து வரவில்லை.

தன் புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக்கொண்ட கலாமணி, "குமுதா தான் வகுப்பில் எந்தப் பாடத்திலும் முதல். நான் எத்தனையோ சிரமப்பட்டுப் படித்துங்கூட என்றால் இரண்டாவதாகத் தான் வர முடிந்தது. ஒவ்வொரு வருஷமும் குமுதாவே முதல் பரிசு வாங்குவாள்" என்று கூறினாள்.

குமுதாவின் பிரிவினால் வறண்டு உலர்ந்து போயிருந்த மூர்த்தியின் உள்ளத்தில் கலாவின் நினைவின் நிழலான அந்த வார்த்தைகள் இன்ப மழைத் துளிகள் போல் விழுந்து கொண்டிருந்தன.

"ஒரே ஒரு சமயம் பரீட்சையின் பொழுது குமுதாவுக்கு உடம்புக்கு வந்து விட்டது. அந்த வருஷந்தான் எனக்கு முதற் பரிசு கிடைத்தது; குமுதாவுக்கு இரண்டாவது பரிசு வந்தது. என் அடுக்குப் புத்தகங்களை வாங்கிப் பார்த்து விட்டு, 'அடி கலா! பரீட்சை சமயத்தில் எனக்கு உடம்புக்கு வந்திரா விட்டால் இந்த முதற் பரிசு எனக்குக் கிடைத்திருக்க வேண்டும். இருந்தாலும் பரவாயில்லை. எனக்கு அப்புறம் அது வேறு யாருக்கோ கிடைத்து விடாமல் உனக்கே கிடைத்ததுபற்றி எனக்கு அளவில்லாத சந்தோஷம். எனக்குக் கிட்டாதது உனக்கே உரித்தா யிருக்கட்டும்!' என்று அவள் என் தோளைப் பிடித்து உலுக்கிச் சொன்ன வார்த்தைகள் இன்னும் என் காதுகளில் ரீங்காரம் செய்து கொண்டிருக்கின்றன. எத்தனை தீர்க்கதரிசனமாக அமைந்து விட்டன அவ்வார்த்தைகள் இப்பொழுது!" என்று சொல்லிக் கொண்டே அந்தப் படத்தை மறுபடியும் உற்றுப் பார்த்து மார்போடணைத்துக் கண்ணீர் உகுத்தாள் கலாமணி.

மூர்த்திக்கு என்ன பேசுவதென்றே புரியவில்லை; மௌனம் சாதித்தான். கலாவும் சிறிது நேரம் என்ன பேசுவது என்று புரியாமல் படத்தையே ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"இனிமேல் இந்தப் படம் இப்படி நம் முன்னிலையிலேயேதான் இருக்க வேண்டும்" என்று கூறி மௌனத்தைக் கலைத்தாள் கலாமணி. உடனே அங்கிருந்த ஆணியில் அவளே தன் கரங்களால் குமுதாவின் படத்தை மாட்டினாள்.

இருவரும் கைப்பிடிச் சுவரண்டை போய் எட்டிப் பார்த்தார்கள். கலாமணி அத்தனை சிரமப்பட்டுப் போட்டிருந்த சிக்குக்கோலம், அவர்கள் பேசிக் கொண்டிருந்த பொழுது பெய்த மழையில், போட்ட சுவடுகூடத் தெரியாமல் நன்றாக அழிந்துபோயிருந்தது.



# <u>நீங்களே</u> நியாயம் சொல்லுங்கள்!

## அறிவாளிக்குகந்த ப்ளேடு எதுவென்று

ப்ளேடுகளிலிருந்து நீங்கள் எதிர்பார்ப்பது என்ன? நெடு நாட்கள் மழுங்காமல் உழைக்கும் கூர்மை. பல நாட்களுக்கு மழமழப்பான சுக க்ஷவரம்.

நீங்கள் ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளை உபயோகிக்காவிடில் இவைகளை எங்ஙனம் அடைவீர்கள்? அனேகமாக முடியாது.

நீங்களே நியாயம் சொல்லுங்கள். ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளை ஏது தயாரிப்பான வேறெந்த ப்ளேடுகளுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். மற்றெந்த ப்ளேடுகளினாலும் இத்தகைய மிருதுவான சுக க்ஷவரம் பெற முடியாது. மற்ற ப்ளேடுகள் அனேக நாட்களுக்கு கூர்மையாக இருந்து உழைக்காது.

உங்கள் பணத்திற்குப் பெறுமானம் கொடுப்பது ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளே. மட்ட ரக க்ஷவரம் பெற வேண்டிய அவசியமும் இல்லை. ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளே வேண்டுமெனக் கேட்டு வாங்குங்கள்.



# 7 o'clock BLADES

ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகள்



# விளையாட்டு அரங்கம்

"பந்து"

## கிரிக்கெட்டு

இங்கிலாந்து நாட்டில் இரண்டு விளையாட்டுக்களுக்குச் சரிசமமான மதிப்பு உண்டு. ஒன்று கிரிக்கெட்டு; மற்றொன்று கால் பந்து. கிரிக்கெட் கோடை காலத்து விளையாட்டு. கால் பந்து குளிர்காலக் களியாட்டம். இவை இரண்டில் எது தேசிய விளையாட்டு என்பதைப் பற்றிச் சர்ச்சைகள் நடப்பது தெரிந்த விஷயம். நெவில் கார்டஸ் என்ற பிரபல எழுத்தாளர் கிரிக்கெட்டைப் பற்றி அழியாப் புகழுரைகள் இயற்றியுள்ளார்கள். கோடை காலம் இங்கிலாந்தில் உதிக்கும் வரை கிரிக்கெட்டுக்கு அழிவு இல்லை என்று கூறுகிறார்.

ஆங்கிலேய சாம்ராஜ்யத்தில் எங்கும் கிரிக்கெட்டுக்குச் சிறப்பு உண்டு. இந்தியாவும் ஒரு காலத்தில் அந்த சாம்ராஜ்யத்தில் இருந்தது தானே! நம் நாடு சுதந்திரம் பெற்றாலும் கிரிக்கெட்டின் தனி மதிப்புக் குறையவில்லை. இங்கிலாந்து தேசம் மாதிரி நம் நாட்டிலும் இந்த விளையாட்டுக்கு ஜனங்கள் ஊக்கமும் அபிமானமும் உண்டு என்றே சொல்லலாம். பல இந்தியர்கள் இந்த விளையாட்டுக்குச் சிறந்த ரத்தினங்களாக அமைந்துள்ளனர். ரஞ்சித் சிங், துலீப் சிங்ஜி, நவாநகர் ஜாம் சாகேப், பட்டோடி நவாப் எல்லோரும் இங்கிலாந்து நாட்டின் கட்சியில் விளையாடி அழியாத புகழ் பெற்றுள்ளனர். இந்தியாவின் கட்சியில் அமார் சிங், நிஸ்ஸார், ஸி. கே. நாயுடு, வி. எம். மர்ச்சென்ட், வினு மங்கட், விஜய ஹஸாரே, அமர்நாத் என்று அடுக்கிக் கொண்டே போகலாம். ஒவ்வொருவரும் தனிப்பட்ட முறையில் கீர்த்தி அடைந்திருக்கிறார்கள். அறுபது வயது அடைந்தும் இன்னும் கிரிக்கெட்டு விளையாட ஸி. கே. நாயுடுவைப் போல் வெகு சிலரே உண்டு.

'ரஞ்சித் எவ்வளவு அழகாக ஆடினார்; பட்டோடியின் திறமைதான் என்ன; அமார்சிங் எவ்வளவு வேகமாகப் பந்தை எறிந்தார்' என்று புத்தகத்தில் படிக்கிறோம். அந்தக் காலத்து மனிதர்களைக் கேட்டால் அது அல்லவோ கிரிக்கெட்டு என்கிறார்கள். இன்று அறுபது வயது பூர்த்தியாகியுள்ள ஸி. கே. நாயுடு எவ்வளவு திறமையுடன் விளையாடினார் என்பதை நாம் கண்ணால் பார்த்திருக்கிறோமல்லவா! செப்பாக்கத்தில் எவ்வளவு தடவை நம்மை மகிழ வைத்திருக்கிறார்! "ஸிக்ஸர்" வேண்டுமென்று கூவினால் பந்து பறந்து வந்து பக்கிங்காம் கால்வாயில் விழும். அவர் இன்று இந்திய கிரிக்கெட்டு உலகத்தில் ஒரு பழுத்த பழமாகி 'ஷஷ்டி அப்த பூர்த்தி' செய்து கொண்டு, இன்னும் கிரிக்கெட்டு விளையாடத் தயாராக இருக்கிறார்!

நாயுடு எவ்வளவு "ரன்"கள் எடுத்திருக்கிறார், எவ்வளவு தடவை "டெஸ்ட்" பந்தயத்தில் விளையாடியிருக்கிறார் என்பதைப் பற்றிக் கிரிக்கெட்டுப் பஞ்சாங்கங்களில் விவரமாக எழுதியிருக்கிறார்கள். கிரிக்கெட்டு உலகில் சிறந்த புகழ்பெற்ற பஞ்சாங்கம், "விஸ்டென்" என்பது. 1936-ம் வருஷத்திய சிறந்த ஐந்து கிரிக்கெட்டு விளையாட்டுக்காரர்களில் நாயுடுவை "விஸ்டென்" தேர்ந்தெடுத்ததே, நாயுடுவின் திறமைக்கு அத்தாட்சி.

கோடாரி கனகய்ய நாயுடு அவர்கள் ஆந்திர தேசத்தவர். நாகபுரியில் பிறந்தவர். பல வருஷங்கள் ஹோல்கார் ராஜ்யத்தில் ஊழியம் செய்து "கர்னல்" என்ற பட்டம் பெற்றார். ஹோல்கார் மஹாராஜாவின் உதவியைக் கொண்டு அந்த ராஜ்யத்தில் கிரிக்கெட்டு விளையாட்டை உன்னத நிலைக்குக் கொண்டு வந்தார். அவர் சிஷ்யர்களில் முக்கியமானவர்கள் முஷ்டாக் அலியும், ஸி. எஸ். நாயுடுவும்.

நம் நாட்டுக் கிரிக்கெட்டு விளையாட்டின் மேம்பாட்டிற்கு ஸி. கே. நாயுடு அவர்கள் செய்த சேவை கொஞ்ச நஞ்சமல்ல. இளைஞர்களுக்கு அவர் ஒரு சிறந்த வழிகாட்டி. அன்னார் நீடு ஆரோக்கியத்துடன் நமக்கு ஊக்கம் தந்து பல காலம் வாழவேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

நமது நாட்டிலும் குளிர் காலம் வந்து விட்டது. எங்கும் கிரிக்கெட் ஆரவாரம் ஆரம்பமாகியிருக்கிறது. இந்த வருஷம் நியூஸிலாந்து கோஷ்டியினர் இந்தியாவுக்கு விஜயம் செய்து கொண்டிருக்கின்றனர். பாகிஸ்தானில் மூன்று "டெஸ்ட்" பந்தயங்களில் இரண்டை இழந்து விட்டிருக்கின்றனர். இந்தியாவில் ஐந்து "டெஸ்ட்" பந்தயம் நடக்கப்போகிறது. ஹைதராபாத் பந்தயத்துக்குச் சென்னையிலிருந்து கிருபால் சிங் அவர்களை இந்தியக் கட்சியில் சேர்த்திருக்கிறார்கள். போன வருஷம் ரஞ்சிப் பந்தயத்தில் இவர் மிகத் திறமையுடன் விளையாடினார். அதே மாதிரி இந்த வருஷமும் நிறைய "ரன்"கள் எடுத்துத் தமிழ் நாட்டுக்குப் புகழ் தேடிக் கொடுத்திருக்கிறார்.



திரு ஸி. கே. நாயுடு

# நாடும் நேரமும்

## ...கப்பலோட்டுவதில்

### வினாடிவரை நேரத்தில் கவனிப்பு
### வைக்கவேண்டியது அத்தியாவசியம்

தொழிற் சாலைகளின் அபிவிருத்தியை முக்யமாகக் கருதும் நாட்டிற்கு பக்குவப்படுத்தாத சாமான்கள், தொழிற்சாலைகளுக்குத் தேவையான இயந்திரங்கள், மின்சார உற்பத்திக்குத் தேவையான மாபெரும் இயந்திரங்கள் மற்றும் ஏனையசாமான்கள் இவையாவும் வியாபாரக் கப்பல்களாலேயே இந்நாட்டிற்குக் கொண்டு சேர்க்கப்படுகின்றன. சாமான்களை நேரப்படி கொண்டுசேர்ப்பது மிகவும் அவசியம். இதற்குக் காரணபூதராய் இருப்பவர் வியாபார கப்பலின் தலைமை மாலுமியேயாகும். இவர் கப்பலோட்டுவது பருவக்காலத்தின் போக்கையொட்டியதாகும். இவருடைய மணிக்கணக்கில் சற்றுவித்தியாசம் இருப்பின், இது காலதாமதம் மற்றும் கணக்கிட முடியாத நஷ்டம் இவைகளை விளைவிக்கும். முன்னேற்றத்தை விரும்பும் நாடு இப்படி ஏற்படக்கூடிய நஷ்டத்தை தாங்க முடியாது. எனவே நேரக் கண்காணிப்பிற்கு கடிகாரம் ஓர் முக்யமான தேவையேயன்றி பெருவாழ்வுக்குற்றதல்ல.



**ஸ்விஸ் ஜுவல்ட்-லீவர் கடிகாரம் தான் நீங்கள் செலவு செய்யும் பணத்திற்குச் சரியான பெறுமானம்**




**ஸ்விட்ஸர்லாந்து கடிகாரத்தயாரிப்பாளர்கள்**

FHI-12 TAM.

# விதியின் தியாகம்

ஜயலக்ஷ்மி

"நான் சொல்வதைக் கேட்க மாட்டாயா, மாலதி?"

"இதைத் தவிர வேறு எதைச் சொன்னாலும் கேட்கிறேன், சுசிலா! வீணாக என்னைத் தொந்தரவு செய்யாதே!" என்றாள் கெஞ்சும் பாவனையில் மாலதி.

"எனக்காக இல்லா விட்டாலும் உன் அம்மாவுக்காகவாவது நீ கலியாணம் செய்து கொள்ளத்தான் வேண்டும். உன் தாயார் படுகிற வேதனையை என்னால் பார்க்க முடியவில்லை!" என்று கூறிய சுசிலாவின் குரலில் வேதனை அளவு கடந்து இருந்தது.

"அம்மாவுக்கு என்ன? பணமும் பகட்டும் இருந்து விட்டால் போதும்!"

"அம்மா சொல்லுகிற அந்தப் புங்கனூர் வரன் உனக்குப் பிடிக்க வில்லை யென்றால், வேறு வரன் பார்த்தால் போயிற்று!"

"நடக்காத காரியத்தைப் பற்றிப் பேசி என்ன பயன்? என்னைவிடப் பெரியவளான நீ மட்டும் ஏன் மணமாகாமல் இருக்கிறாய்? நீயே அவசரப் படாமல் இருக்கும் பொழுது எனக்கு என்ன இப்பொழுது அவசரம், சொல்லு?"

பேச்சை மாற்றும் தோரணையில் பேசினாள் மாலதி.

"என் நிலைமை வேறு. உன் நிலைமை வேறு! எனக்காகக் கவலைப்பட யாரும் கிடையாது. நான் ஒரு அனாதை, போதாக் குறைக்கு விதியும் வஞ்சித்து விளையாடுகிறது. உனக்கு அப்படியல்லவே ......" என்றாள் சுசிலா நிராசை மிகுந்த குரலில்.

"நம் இருவருக்கும் ஏதோ கொஞ்சம் வித்தியாசம் இருந்த போதிலும், நானும் உன்னைப் போலவே அந்தப் பொல்லாத விதியால்தான் துன்பப்படுகிறேன். என் விருப்பம் நிறைவேற அம்மா மட்டும் தடை சொல்வதாக நீ எண்ணிக் கொண்டிருக்கிறாய். ஆனால் ...?"

இதைக் கூறுவதற்குள் மாலதியின் கண்களில் நீர் துளித்து விட்டது.

"... ஆனால் என்ன?" என்றாள் சுசிலா.

"உன்னிடம் சொல்லி என்ன பயன்?"

"பயன் இருப்பதும் இல்லாததும் சொல்லிப் பார்த்தால்தானே தெரியும்?" என்றாள் சுசிலா. அதற்கு மாலதி பதில் பேசவில்லை.

"ஏன் பேசாமல் இருக்கிறாய், மாலதி?" என்று விடாப்பிடியாகக்கேட்டாள் சுசிலா.

"எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை, சுசி!"—மாலதிக்கு அழுகையே வந்து விட்டது.

"உனக்கு ஒன்றுமே பிடிக்காமல் இருக்கச் செய்தவர் யார்? அவர் பெயர் என்ன?" என்று கேட்டாள் சுசிலா.

"சுரேஷ்!"

"அழகான பெயர்!"

"அவருக்கு ஒரு நண்பர். உயிருக்கு உயிரான ... இல்லை, இல்லை ...... உயிரை விட மேலான நண்பர்."

"அவருக்கு என்ன?"

"அவருக்கு ஒன்றுமில்லை. அவர் இவருடைய ஆதரவில் இருந்து வருகிறார்."

"என்னைப் போல் அனாதை போலிருக்கிறது அவரும்!"

"அனாதை மட்டுமல்ல. இரண்டு கண்களும் தெரியாத குருடர்!"

"ஐயோ, பாவம்! அப்புறம்?" பரிதாபமாகக் கேட்டாள் சுசிலா.

"அவருக்குக் கலியாணம் ஆனபிறகுதான் இவர் தம் கலியாணத்தைப் பற்றி யோசிப்பாராம், சுசிலா! குருடரை எந்தப் பெண் மணந்து கொள்ள முன் வருவாள்? என் விருப்பம் எந்தக் காலத்தில் நிறைவேறப் போகிறதோ? அதனால்தான் நான் கலியாணமே வேண்டாம் என்கிறேன்!" என்றாள் மாலதி.

ஒரு கணம் அங்கே அசாதாரணமான அமைதி நிலவியது.

"மாலதி! இந்த நிமிஷமே உன் சுரேஷிடம் போய்ச் சொல்லு, நான் அவரு



பம்பாய் மாதுங்காவில் 2-11-55 அன்று வீடர்னி பைரேட்டரியைச் சேர்ந்த ஸ்ரீ என். விசுவநாதன் அவர்கள் புதல்வி சௌ. எஸ். வி. நாகலட்சுமிக்கும் கிசான் டிரேடிங் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ கே. என். நாராயணனுக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க, மணமக்கள்!

டைய நண்பரை மணந்து கொள்ளச் சம் மதித்து விட்டதாக! இரண்டு திருமணமும் ஒன்றாகவே நடக்கட்டும்!'' என்றாள் சுசீலா அழுத்தந் திருத்தமான குரலில்.

"சுசீலா! என்ன பிதற்றுகிறாய்? நீயா அந்தக் குருடரை மணந்து கொள்வது? அப்படியானால் உன் ... உன் சேகரின் கதி? அவர் வந்து ...'' என்று பதற்றமாகக் கேட்டாள் மாலதி.

"நான்கு வருஷங்களாக வராதவர் இனி மேலா வரப்போகிறார்? நான் ஒருத்தி வாழ்வுக்காக ஏங்கித் தவிப்பது போதாதா? நீயுமா அந்தத் தவிப்புக்கு உள்ளாக வேண்டும்? வேண்டாம், மாலதி! வேண் டாம்! நீயாவது மனத்துக்குகந்தவரை மணந்து சுகப்படு. உனக்காக நான் இந்தச் சிறு தியாகத்தைக் கூடச் செய்யா விட் டால் நான் ஒரு தோழியே அல்ல!'' என்று மொழிந்த சுசீலாவின் குரல் உணர்ச்சி மிகுதியினால் கரகரத்தது.

"இரண்டு கண்களும்தெரியாத குருடரை மணந்து கொள்ள உன் மனம் உண்மையாகவே துணிந்து விட்டதா, சுசீலா!''—ஆச்சர்யம் பொங்கக் கேட்டாள் மாலதி.

"ஆம், நான் அவரை மனப்பூர்வமாக மணந்து கொள்ளத் தீர்மானித்து விட் டேன். போ! நீ சீக்கிரமாகப் போய் உன் சுரேஷிடம் விஷயத்தைச் சொல்லி, மேலே ஆகவேண்டியதைக் கவனி!'' என்று அவளைத் துரிதப்படுத்தினாள் சுசீலா.

"அவரை நீ பார்க்க வேண்டாமா?''

"எனக்கு யாரையும் பார்க்க வேண்டு மென்கிற அவசியமில்லை. அவர்களை நம் வீட்டுக்கு வரவழைக்க வேண்டும் என்று உனக்குத் தோன்றினால் நான் தடை சொல்ல வில்லை!'' என்றாள் சுசீலா விருப்பு வெறுப்பற்ற மனத்தோடு.

சுசீலா நீண்டதொரு பெருமூச்சு விட் டாள். அவள் நெஞ்சின் அலைகள் ஆர்ப் பரித்து அட்டகாசம் புரிந்தன. 'உன் முடிவு சரியா?' என்று அவளுடைய உள் ளுணர்வு அவளை இடித்துக் கேட்டது.

'சரியில்லாமல் என்னவாம்? நான்கு வருஷங்களாக அவர் என்னை மறக்கலாம். எனக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காற் றில் பறக்க விட்டு விட்டு இருக்கிற இடம் கூடத் தெரிவிக்காமல் இருக்கலாம். நான் மட்டும் அவரை மறக்கக் கூடாதோ?'

'உன்னால் அவரை மறக்க முடியுமா? எதற்கு நீ தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்ளப் பார்க்கிறாய்?'

மனச்சாட்சியின் இந்தக் கடுமையான தாக்குதலுக்குப் பதில் கூறுவதற்கு முடி யாமல் தத்தளித்தாள் சுசீலா.

நினைவுக் குதிரை நான்கு வருஷங் களுக்கு முன்பு இருந்த வாயத் தில் போய் நின்றது. அப்போது



# டால்டா க்விஸ்

## போட்டி

# பரிசு பெற்றவர்கள்

சமீபத்தில் நடைபெற்ற டால்டாக்விஸ் போட்டியில் கலந்துகொண்டவர்களில் முற்றிலும் சரியான விடைகள் சமர்ப்பித்தவர்கள் 145 பேர்கள். முதல் பரிசுத் தொகையாகிய ரூ. 20,001, போட்டி விதிகளின்படி, 145 பேர்களுக்கு சமமாகப் பகிர்ந்து கொடுக்கப்படும்; ஆகவே ஒவ்வொருவரும் ரூ. 138 பெறுகின்றனர். இதைத்தவிர, முதல் பரிசு பெற்றவர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து தங்களுக்கு இஷ்டமான ஏதேனுமொரு குழந்தைகள் ஆஸ்பத்திரிக்கோ, வார்டுக்கோ ரூ. 20,001 நன்கொடை வழங்கும் உரிமை பெறுகிறார்கள்.

முதல் பரிசு பெற்றவர்களின் முழு ஜாபிதா நாட்டிலுள்ள பிரதான பத்திரிகைகள் எல்லாவற்றிலும் பிரசுரிக்கப்படும்.

இரண்டாவது பரிசுத் தொகையாகிய ரூ. 5001, 869 பேர்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்படுகின்றது; அவர்கள் ஒவ்வொருவரும் ரூ. 5-13-0 பெறுகின்றனர்.

பரிசு பெறுபவர்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக கம்பெனியால் அறிவிப்பு அனுப்பப்படும்.




டால்டா

பிராண்டு

வனஸ்பதி

HVM. 269-X28 TM

உங்களைக்
காப்பாற்றிக்
கொள்ளுங்கள்

பாலுட்ரின்

மலேரியாவைத்
தடுக்கிறது

ICI

கேஷ்ரஞ்சன்

தங்கள்
கூந்தலின்
நன்மையை
விரும்புவோர்

விரும்புவார்கள்

ஆஹா,
போட்டால்...
போடணும்

மைதீன்
புகையிலை

போன்
41
தந்தி
"MYDEENCO"

E.S. மைதீன் & கோ
கும்பகோணம்.

சுசீலாவுக்கு வயது பதினேழுதான். அவளுக்குத் துணை அவளுடைய அன்பே உருவான அன்னையும், கண்டவர் கருத்தைக் கணப்பொழுதில் கவரக் கூடிய அற்புத எழிலுமேதான். அன்னையால் ஆதரவும், அழகால் பெருமையும் கிடைத்தன சுசீலாவுக்கு. அந்த அழகின் பெருமை ஒரு நாள் சேகரின் காதலைத் தந்தது. அவனும் அழகன். பார்க்கப் பார்க்கத் திகட்டாத முகம்; சுருண்டு நெற்றியில் தொங்கும் கிராப்பு; எப்பொழுதும் குறும்பு தவழும் மெல்லிய உதடு. நெடிய எடுப்பான உருவம். அவனுடைய கம்பீரமான உருவத்தைக் கண்டு மதிமயங்கி, மனத்தைப் பறி கொடுத்தாள் பேதை சுசீலா. அவனும் அவள் எழிலில் சிக்குண்டு தன்னை மறந்தான்.

இவர்களை ஒன்று சேர்க்கத் துடித்தாள் சுசீலாவின் தாயார். ஆனால் விதி...!

திடீரென்று மேல் படிப்புக்காக அரசாங்கத்திலிருந்து சேகருக்கு அழைப்பு வந்தது. 'இரண்டே வருஷம் காத்திரு! வெற்றி மாலை ஏந்தி ஓடிவருவேன், மண மாலை சூட' என்று உறுதி கூறிவிட்டு ஊரை விட்டே, நாட்டை விட்டே விமானத்தில் ஏறிப் பறந்து சென்று விட்டான் சேகர்.

காலமென்னும் தாழை வருஷமென்னும் இரண்டு மடல்களை உதிர்த்து விட்டது. வருவான் வருவான் என்று வழிபார்த்திருந்தவன் வரவில்லை. வரவேயில்லை. நெஞ்சம் புழுங்கித் தவித்தாள் சுசீலா. வேறு யாரையாவது மணந்து கொள்ளும்படி தாயார் எவ்வளவோ கூறினாள். ஆனால் மகள் கேட்கவில்லை. மகளின் திருமணத்தைப் பார்க்கக் கொடுத்து வைக்காமலே தாயார் கண்களை மூடி விட்டாள்.

சுசீலா, தனக்கு ஒரே ஆதரவாக இருந்த தாயாரும் போய் விடவே சிறகொடிந்த பட்சியானாள். அழகும் இளமையும் உள்ள ஒரு இளம் மங்கை தனித்து வாழ்வது எப்படி இக்காலத்தில்? புகலிடம் தேடி ஊரைவிட்டுப் புறப்பட்டாள் சுசீலா. பள்ளித் தோழி மாலதியைக் கண்டாள். அவளுடைய அந்தஸ்துப் போர்வைக்குள் தன்னை ஒரு பணி புரிபவளாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினாள். மாலதியோ ஒரு குணக்குன்று. அவள் இதயத்தில் வேற்றுமைக்கு இடமே கிடையாது. சுசீலாவை ஒரு சகோதரியாகவே அவள் ஏற்றுக் கொண்டாள். அவளுடைய தாயாரும் சுசீலாவைத் தன் மகளாகவே பாவித்தாள். இந் நிலையில் மேலும் இரண்டு வருஷங்கள் சென்றன.

சுசீலாவை மணம் செய்து கொள்ளும்படி 'தொந்தரவு செய்தார்கள் மாலதியும் அவளுடைய அன்னையும். 'சேகருக்காக எவ்வளவு யுகம் வேண்டுமானாலும் நான் கன்னியாகவே காத்திருப்பேன்' என்று சுசீலா ஒரே தீர்மானமாகக் கூறி விட்டாள்.

அப்படிப்பட்டவள், இன்று மாலதியிடம் சுரேஷின் நண்பனை மணந்து கொள்வதாகக் கூறிவிட்டாள். அதற்குக் காரணம் அவளுக்கு மாலதியினிடம் உள்ள அளப்பரிய அன்பும் நன்றியுமேதான். 'அவளுக்கு இருக்க நிழலும், உண்ண உணவும், உடுக்கத் துணியும் கொடுத்து ஆதரிக்கும் புண்ணியவதிக்காக அவள் இந்தத் தியாகத்தைச் செய்யக் கூடாதா? அதற்காகவே அவள் மனத்தைச் சிரமப்பட்டுக் கல்லாக்கிக் கொண்டு விட்டாள்.

அன்று மாலை சுசீலாவிடம் சொன்னபடி சுரேஷையும், அவனுடைய நண்பரையும் மாலதி தன் வீட்டுக்கு வரவழைத்து விட்டாள். அவளே இருவருக்கும் விழுந்து விழுந்து உபசாரணைகளைச் செய்தாள். விருந்துபசாரமெல்லாம் முடிந்தவுடன் பொறுமையை இழந்த சுரேஷ், "என்ன, மாலதி! இன்னமும் உன் தோழியைக் காட்டாமல் வைத்திருக்கிறாயே? அந்தத்



இவ்வுலகில் இயற்கை யன்னை எத்தனையோ அதிசய விநோதங்களுடன் உலவி வருகிறாள். அவ்வதிசயக் காட்சிகளில் இந்த விநோதத் தென்னை மரமும் ஒன்று. பல கிளைகளுடன் கூடிய இந்த அதிசயத் தென்னை மரம் சென்னை கீழ்ப்பாக்கத்தில் வாசு தெருவில் இருக்கிறது.

தியாகச் சுடரை நான் தரிசிக்க வேண்டாமா?" என்று கேட்டான்.

"இதோ அழைத்து வருகிறேன். அவளும் உங்களுடைய நண்பரைப் பார்க்க வேண்டாமா?" என்று கேட்டபடியே உள்ளே சென்று சுசீலாவுடன் வெளியே வந்தாள் மாலதி.

தோழியின் அரவணைப்பில் தயங்கித் தயங்கி ஹாலுக்குள் நுழைந்த சுசீலாவின் உடல் வெடவெட வென்று நடுங்கியது. சோபாவில் கருப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டு ஆஜானுபாகுவாக உட்கார்ந்திருந்த சுரேஷின் நண்பனின் மேல் அவள் பார்வை விழுந்தது. அடுத்த கணம் "ஹா, சேகர்! நீங்களா?" என்று பலமாகக் கூவினாள். அப்பொழுது அவளுக்கு மயக்கமே வந்து விட்டது.

மாலதியும் சுரேஷும் ஓடிவந்து அவளைச் சூழ்ந்து கொண்டார்கள். அவளுக்குத் தண்ணீர் தெளித்து மூர்ச்சை தெளிவித்தார்கள்.

"சுசீலாவா? என் சுசீலாவா?" என்று கேட்டுக் கொண்டே தட்டுத் தடுமாறியபடி எழுந்திருந்து சுசீலாவிடம் வந்து உட்கார்ந்தான் சேகர்.

"நான் காண்பது கனவல்லவே! நீங்கள் தானா? உங்களுக்கு இந்தக் கதி எப்போது ஏற்பட்டது?" என்று வியப்பும் திகைப்பும் நிறைந்த குரலில் படபடவென்று கேள்விகளை அடுக்கினாள் சுசீலா.

"நான்தான், சுசீலா! நானேதான். உன் சேகர்தான் இன்று இந்த விபரீதக் கோலத்தில் உன் முன் நிற்பது. எந்த 'ஒன்று' நடக்கக் கூடாது என்று நான் நினைத்தேனோ, எதற்காக உன்னைப் பார்க்கக் கூடாது என்று என் மனத்தைக் கல்லாக்கி வைத்திருந்தேனோ, அது இன்று நடந்தே விட்டது!" என்று அரற்றினான் சேகர்.

"வீணாக மனத்தை அலட்டிக் கொள்ளாதீர்கள். உங்களுக்கு இந்த விபத்து ஏற்பட்ட உடனேயே நீங்கள் என்னிடம் வந்து விட்டிருந்தால்......?"

"நீ என்னை உன் தியாகத் தீயினால் குளிப்பாட்டி இருப்பாய். அந்த நிலைக்கு உன்னைக் கொண்டு வரக் கூடாது என்று தான் இத்தனை வருஷங்களாக எவ்வளவோ துன்பங்களை யெல்லாம் சகித்துக் கொண்டு வந்தேன். ஆனால் விதி யாரை விட்டது? எனக்காகச் சுரேஷ் வாழ்வின்றி நிற்பதா என்று இந்தக் கலியாணத்துக்கு வேண்டா விருப்பாகச் சம்மதித்தேன். அவன் வாழ்வு வளம் பெற வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன்தான் நான் இந்தத் திருமணத்துக்குச் சம்மதித்தேன். சுசீலா! நீ ஒரு வேளை......"

"என்ன பேச்சு பேசுகிறீர்கள்? நானும் மாலதிக்காகத்தான் உங்களை இன்னாரென்று கூடத் தெரியாமல் மணக்கச் சம்மதித்தேன். நீங்கள்......நீங்கள்... என் சேகரேதான் என்பதை அறிந்தவுடன் எனக்கு ஏற்பட்டுள்ள சந்தோஷத்தைச் சொல்லி முடியாது!" என்றாள் சுசீலா. அவள் குரல் சந்தோஷ மிகுதியால் தழுதழுத்தது.

'விதி, விதி!' என்று எதையும் விதியின் தலையில் போடுகிறோமே, அந்த விதியே அல்லவா அவர்கள் இருவரையும் காட்டிலும் பெருந் தியாகம் செய்து அன்று அவர்கள் இருவரையும் ஒன்று கூட்டி வைத்து விட்டது!

## டி. கே. சி.யின் கடிதங்கள்

திருக்குற்றாலம்

5—7—50

பொதுவாக ஆங்கிலேயருக்குக் காது ஒரு மாதிரிதான் என்று ஐரோப்பிய இலக்கண ஆசிரியர்கள் சொல்லுவார்கள். எந்த அசட்டு வார்த்தையையும் காதுக்குள் போட்டுக் கொள்ளுவார்களாம். லத்தீன் பாஷையையும் கிரேக்க பாஷையையும் பிரஞ்சு பாஷையையும் வாயில் வைத்துக் குதக்கி ருசியற்றுப் போய் விட்டது வாய் என்று சொல்லுவார்கள். 'டாக்கி' என்று கூசாமல் சொல்லி விடுகிறான் ஆங்கிலேயன். அவன் காதைப் போல் அவ்வளவு மோசம் இல்லை தமிழன் காது. 'பேச்சி' என்று சொன்னால் காது புண்பட்டது போல் அல்லவா படும். கொஞ்சம் சிரமம் எடுத்துக் கொண்டு "பேசும் படம்" என்று சொல்ல அருள் பாலிக்கிறான் தமிழன். தமிழனுடைய அந்த அருளுக்கு வந்தனம்.

ஆனாலும் "கதைக்கிறான்" "இடர்ச் சம்பவம்" என்று சொல்ல எப்படித்தான் துணிகிறதோ தமிழன் நா; தெரியவில்லை.

ஆங்கிலப் பழக்கந்தான் காரணம் என்று சொல்ல வேண்டும்!

டி. கே. சிதம்பரநாதன்

# நூற்றில் ஒரு வார்த்தை ...

பணத்தின் மதிப்புக்கேற்ற
மிகச் சிறந்த டூத் பிரஷ்

# டெக்
## டூத் பிரஷ்ஷை வாங்குங்கள்

ஜான்ஸன் அண்டு ஜான்ஸனின் ஒரு உயர்தர தயாரிப்பு

# துளசி மணம்

மதுராபுரியில் ஒரு நந்தவனம். நந்தவனத்தில் துளசிச் செடிகளும் ரோஜாச்செடிகளும் இன்னும் பலவகையும் அடர்ந்து வளர்ந்து வந்தன.



விஷ்ணு பக்தர் ஒருவர் வந்து தினமும் குடலை நிறையத் துளசி பறித்து எடுத்துக் கொண்டு போவார். அரமனைப் பெண்கள் ரோஜாப் பூவைப் பறித்துப் போவார்கள்.

துளசிச் செடியைப் பார்த்து ரோஜாப்பூ கொஞ்சம் திமிரோடு பேசிற்று: "ஏன் ராஜகுமாரிகள் உன்னை நெருங்குவதில்லை? வெறும் இலையாகப் படர்ந்திருக்கிறாய்; சிவப்பாகப் பூப் பூத்தாயானால் உன்னையும் லட்சியம் செய்வார்கள்" என்றது.

"ஏழைப் பிராமணன் பக்தியே எனக்குப் போதும். சுவாமியின் பாதத்தில் என் கொழுந்துகள் போய்ச் சேருகின்றன. அதைவிட என்ன வேண்டும்?" என்றது துளசி.

ராஜகுமாரியின் தலையில் கூந்தலை அலங்கரிக்கும் கௌரவம் பெரிதென்று ரோஜாச் செடி நினைத்தது. 'இந்தத் துளசிச் செடிக்குத் தெரிந்தது இவ்வளவு தான்' என்று அதற்கு மேல் ரோஜாச் செடி பேசவில்லை.

* * *

ஒரு நாள் ராஜாவினுடைய கடைசிக் குமாரத்தி—சிறு குழந்தை—தானே பூப்பறிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு நந்தவனத்துக்கு வந்தாள். பூப் பறிக்கும்போது கையில் முள் தைத்தது. வலி பொறுக்க முடியாமல் அழுதாள். கூட வந்தவர்கள் குழந்தையை அரவணைத்து அரமனைக்கு எடுத்துப் போனார்கள்.

ராஜாவுக்குத் தன் அருமைக் குழந்தையின் விரலில் ரத்தத்தைப் பார்த்து வெகுகோபம் உண்டாயிற்று. ரோஜாச் செடியில் முள் இருப்பது அரசனுக்குத் தெரியாது. அவன் தோட்டத்துக்குப் போவதில்லை. போனாலும் செடிகளைக் கவனித்ததில்லை. ரோஜா மாலைகளைத்தான் கண்டவன்.

"இந்த முள்ச் செடியிலா ரோஜாப்பூ உண்டாகிறது. அது இனி நம்முடைய நந்தவனத்தில் வேண்டியதில்லை. பிடுங்கி எறிந்து விடுங்கள்!" என்று உத்தர விட்டான்.



ராஜா முரட்டுத் தனக்காரர். ஆணைபடியால் யாரும் தடை சொல்லவில்லை. சேவகர்கள் நந்தவனத்திலிருந்த ரோஜாச் செடிகளை யெல்லாம் பிடுங்கி எறிந்து விட்டு அரசனுக்குத் தெரிவித்தார்கள். அவனும் "ரொம்ப சரி" என்று சொல்லி விட்டான்.

துளசிச் செடி மட்டும் நந்தவனத்தில் நின்றது. "ஐயோ பாவம்!" என்று அரமனையை நம்பிய ரோஜாச் செடியின் கதியைக் கண்டு துயரப் பட்டது. வழக்கம் போல் துளசி பறிக்க வந்தவர் 'இன்று என்ன துளசி அதிக வாசனையாக இருக்கிறதே!' என்று வியந்தார்.

துளசியி னுடைய துயரந்தான் அப்படி மணமாக வீசுகிறது என்று அவருக்குத் தெரியாது!

ராஜாஜி

PLYMOUTH



FIAT






WILLYS JEEP



FERGUSON
TRACTOR



FARGO
BUS-LORRY



# எவ்வித தேவைக்கும் எமது பணி

PLYMOUTH — உல்லாஸ எழில்
FIAT — சிக்கனம்
FARGO — ரஸ்தா போக்குவரத்து
FERGUSON — விவசாயத்திற்கு
JEEP — எல்லா தேவைக்கு

உருப்பு விநியோகம், பராமரிப்பு
எமது முதல் கடமை.

**சுந்தரம் மோட்டார்ஸ் லிட்., மதராஸ் - 6.**

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிட்.,**

மதுரை, திருச்சி, திருநெல்வேலி, புதுக்கோட்டை,
சேலம் & கோயமுத்தூர்.

TVS2-74TM

## 22. அகப்பட்டு விட்டான்!




அழ. வள்ளியப்பா

அந்தப் பையன் படிகளில் ஏறிச் செல்வதைப் பார்த்ததும், "டேய், டேய்! அவன் மேலே போகிறானடா! சீக்கிரம் வாடா. நாமும் அவன் பின்னாலேயே போவோம்" என்று கூறினான் ஆனந்தன். இருவரும் அவனைப் பின்தொடர்ந்து சென்றார்கள். படிகளில் ஏறிச் செல்லும் போது, பாவம், குண்டுமணி வெகு சிரமப்பட்டான். மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்கியது. யானை கட்டும் மண்டபத்துக்குப் பக்கத்தில் வந்ததும் 'அப்பாடா!' என்று தொந்திக் கணபதி போல் 'தொப்' பென்று உட்கார்ந்துவிட்டான் குண்டுமணி!

ஆனந்தனுக்கு ஒரே ஆத்திரமாக இருந்தது. "என்னடா குண்டுமணி, சமயம் தெரியாமல் இப்படி உட்கார்ந்து விட்டாயே! அவனைப் பின் தொடர்ந்து போக வேண்டாமா?" என்றான்.

"ஆனந்தா, அவசரப் படாதே! அவன் எங்கே போய் விடுவான்? உச்சிப் பிள்ளையார் கோயில் வரை தானே போவான்? அப்புறம், அப்படியே பறந்து போய் விடுவானா? அல்லது உச்சிக்குப் போய் அங்கிருந்தபடியே உருண்டு வேறு பக்கமாக விழுந்து விடுவானா? எப்படியும் நம் கண்ணில் படாமல் அவனால் போக முடியாது" என்று குண்டுமணி கூறிக்கொண்டிருக்கும்போதே மண்டபத்தில் கட்டப்பட்டிருந்த யானை பயங்கரமாகப் பிளிற ஆரம்பித்தது. அந்தச் சத்தத்தைக் கேட்டதும், குண்டுமணிக்குத் தூக்கி வாரிப் போட்டது. பயத்தில் தானாக எழுந்து விட்டான். எழுந்து என்ன செய்தான்? அங்கேயே நின்றானா? இல்லை. இரண்டு இரண்டு படிகளாகத் தாவித்தாவி மேலே சென்றான். நூற்றுக்கால் மண்டபத்தை அடைந்த பிறகுதான் திரும்பிப் பார்த்தான். பின்னால் வந்த ஆனந்தன் சிரித்துக் கொண்டே, "குண்டுமணி, கட்டிக் கிடக்கும் யானைக்கே இந்தப் பயம் பயப்படுகிறாயே! நீ பெரிய தைரியசாலிதான்! யானை சத்தம் போட்டிருக்காத போனால், நீ எங்கே எழுந்து வந்திருக்கப் போகிறாய்? சரி, வா. சீக்கிரம் போவோம்" என்று கூறி அவனை அழைத்துக்கொண்டு போனான்.

மேலே சென்ற அந்தப் பையன் தாயுமானவர் சாமியைத் தரிசித்து விட்டு மட்டுவார் குழலம்மையார் சந்நிதிக்கு வந்தான். அம்மனையும் தரிசித்த பிறகு, பக்கத்திலே இருக்கும் வெளி மண்டபத்துக்குச் சென்றான். அங்கு சுவர்களில் தீட்டப்பட்ட அழகான ஓவியங்களைப் பார்த்துப் பார்த்து ஆனந்தப்பட்டான்.

நடராஜப் பெருமானின் பலவிதத் தோற்றங்களையும், வேடிக்கையான பல சித்திரங்களையும் அவன் பார்த்தான். ஒரு யானைப் பாகன் யானையை ஓட்டிக் கொண்டு வருகிறான். எதிரே, ஒரு காளை மீது ஒருவன் ஏறி முரசு அடித்துக் கொண்டு வருகிறான். யானையும் காளையும் 'டங்' என்று முட்டிக் கொள்கின்றன. என்ன ஆச்சரியம்! யானையின் தலையும், காளையின் தலையும் ஒன்றாகி விடுகின்றன! இரு வெவ்வேறு மிருகங்களுக்கு ஒரே தலை! யானையை மட்டும் பார்த்தால், யானையின் தலை தெரியும். காளையை மட்டும் பார்த்தால் காளையின் தலை தெரியும்! இப்படி ஒரு அதிசய சித்திரம்!

அவன் ஆச்சரியத்துடன் இன்னொரு சித்திரத்தைப் பார்த்தான். அதில் எட்டுக் குரங்குகள் இருக்கின்றன. ஆனால்,

அந்த எட்டுக் குரங்குகளுக்கும் ஒரே நிலைதான்! உடல்தான் எட்டு! இப்படிப் பல அற்புத ஓவியங்களை அந்தப் பையன் பார்த்துக் கொண்டே யிருந்தான்.

"அடேயப்பா! பார்ப்பதற்கே கழுத்து வலிக்கிறதே! எழுதும்போது அந்த ஓவியன் எவ்வளவு சிரமப்பட்டிருப்பான்!" என்று கூறியபடி ரசித்து நின்றான். அப்போது ஆனந்தனும், குண்டுமணியும் அங்கே வந்து சேர்ந்து விட்டார்கள். உடனே, ஆனந்தன், "டேய் குண்டுமணி, நான் மெதுவாக அவன் பக்கத்திலே போய் நிற்கிறேன். என் உயரமும் அவன் உயரமும் சரியாக இருக்கிறதா என்று பார்த்துச் சொல். பிறகு, நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று கூறி விட்டு, மெல்ல நடந்தான். அந்தப் பையனின் அருகிலே போய் நின்றான். உடனே குண்டுமணி, "வித்தியாசமே இல்லை! ஒரே உயரம்!" என்று கத்தினான்.

சத்தத்தைக் கேட்டதும், அந்தப் பையன் திரும்பிக் குண்டுமணியைப் பார்த்தான். குண்டுமணியின் உருவத்தைப் பார்த்ததும், அவனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. உடனே ஆனந்தன் அந்தப் பையனைப் பார்த்து, "ஏனப்பா, உன் பெயர் என்ன?" என்று கேட்டான்.



"என் பெயர் எதுவாயிருந்தால் உனக்கென்ன?" என்றான் அந்தப் பையன்.

"இல்லை...என் மாமா கடிதம் எழுதியிருக்கிறார். உன் பெயர் ரமணிதானே!" என்று கேட்டான் ஆனந்தன்.

அதற்குள் குண்டுமணி அருகிலே வந்து, "தம்பி, உன்னை மட்டும் ஒளிக்கவே ஒளிக்காதே! உன் நன்மைக்காகத்தான் கேட்கிறோம். நீ மட்டும் ரமணியாயிருந்தால், எவ்வளவு குஷியாக இருக்கலாம் தெரியுமா? இப்போதே கூட்டிப் போய், பெரிய கடைவீதியிலே இருக்கிறதே ஒரு பெரிய ஹோட்டல், அதிலே பாதாம் அல்வா, பாசந்தி, லட்டு, ஜிலேபி, மசால் தோசை, பாதாம் கீர், புளியோதரை எல்லாம் வாங்கித் தருவோம். என்ன சொல்கிறாய்?" என்று கேட்டான்.

உடனே அந்தப் பையன், ஒரு நிமிஷம் யோசித்தான். பிறகு சிரித்துக் கொண்டே, "அடடே! என்னைக் கண்டு பிடித்து விட்டீர்களே! ஆமாம், நான்தான் ரமணி என்று உங்களுக்கு யார் சொன்னது?" என்று கேட்டான்.

"யார் சொல்ல வேண்டும்? அடையாளங்களை வைத்துக் கண்டுபிடிக்க எங்களுக்குத் தெரியாதா, என்ன?" என்றான் குண்டுமணி பெருமையோடு.

"ஆமாம் ரமணி, உன்னை நாங்கள் மூன்று நாட்களாக எங்கே யெல்லாம் தேடி அலைந்தோம் தெரியுமா? நல்ல காலம், பிள்ளையார் கருணை வைத்தார். நீயும் கிடைத்தாய். இப்போதே, நீ கிடைத்துவிட்டதாக மாமாவுக்குத் தந்தி அடிக்கப் போகிறேன்" என்றான் ஆனந்தன்.

"தந்தி அடிக்கிறதெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம். முதலிலே, போய் வயிறு நிறையச் சாப்பிடுவோம், வா" என்றான் குண்டுமணி.

அப்போது, அந்தப் பையன், "நீங்கள் பலே பையன்களாக இருக்கிறீர்களே! அடையாளத்தை வைத்தே கண்டுபிடித்து விட்டீர்களே! உன் மாமா கடிதம் எழுதியிருந்தாரா? எழுதியிருப்பார்; எழுதியிருப்பார்" என்றான்.

"தம்பி, எங்களைச் சாமானியமாக நினைத்து விடாதே! அந்த ஆனந்தன் ஒரு துப்பறியும் புலி. இந்தக் குண்டுமணி ஒரு துப்பறியும் சிங்கம். இந்த சினிமாக்களிலே வருகிறார்களே, துப்பறியும் சிங்கங்களும், புலிகளும், அவர்கள் எங்களிடத்திலே பிச்சை வாங்க வேண்டும்" என்று கூறினான் குண்டுமணி.

அவன் அப்படிச் சொல்லி வாய் மூடினானோ இல்லையோ, உடனே "சாமி! பிச்சை போடுங்கோ" என்று கேட்டுக் கொண்டே வந்தான் ஒரு பிச்சைக்காரன்.

உடனே ஆனந்தன் 'பாவம்' என்று கூறிக்கொண்டே சட்டைப் பைக்குள் கையை விட்டான். 'மணிபர்ஸி'லிருந்து ஒரு காலணாவை எடுத்துப் பிச்சைக்காரனிடம் கொடுக்க நினைத்தான். ஆனால், காலணாவாக அதில் இல்லை. உடனே, நாலணா நாணயம் ஒன்றை எடுத்து அவனிடம் கொடுத்தான். ரமணி கிடைத்து விட்டான் என்ற பேரானந்தத்தில் தான் அவன் அவ்வளவு தாராளமாக அவனுக்குப் பிச்சை போட்டான்! (தொடரும்)





# 'அனஸின்'

## விஞ்ஞான முறையில்
## நான்கு மருந்துகளின்
## ஒரு கலப்பு.

'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷமும், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் :—

1. கொயினா : ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின் : பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின் : ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட் : தலைவலி அது போன்ற மற்ற வலிகளையும் போக்குவதற்கு மிகவும் உபயோகமுள்ளது.




அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' வயிற்றுக்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்.

**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

# தேக ஆரோக்கியத்தை ப்ளிட் உபயோகிப்பதின் மூலம் பாதுகாருங்கள்



1 வீட்டிலுள்ள பூச்சிகள் அனைத்தையும் கொல்லுகிறது.....ஒரு சில பூச்சிகளைத் தான் கொல்லும் என்றில்லை

2 நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு அணுவுக்கும் அதிகமான பூச்சிகளைக் கொல்லுகிறது






## மலேரியா, டைபாயிட், காலரா முதலிய பல வியாதிகளைக் கொண்டுவரும் பூச்சிகளை இது கொல்லுகிறது

## சிவப்பு, வெள்ளை, நீல நிறமும் கொண்ட டின்னில் கிடைக்கும்

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி



# ரவிசந்திரிகா

## 35. அந்தக் கடிதம்!

**சோமு**

ராமநாதன் வந்து சேர்ந்த நிமிஷத்திலிருந்து சாவித்திரி அம்மாளுக்கு இந்த பூமியிலே கால் பாவவில்லை.

"ராமநாதா, நீ பல் தேய்ப்பது பேஸ்டா அல்லது பௌடரா?"

"ராமநாதா, நீ குளிப்பது நல்ல சூடான வெந்நீரா அல்லது வெது வெதுப்பான வெந்நீரா?"

"ராமநாதா, உனக்குக் காப்பி பிடிக்குமா, டீ பிடிக்குமா?"

"ராமநாதா, உனக்குத் தோசை வேண்டுமா, சப்பாத்தி வேண்டுமா?"

ஐயோ! ஐயோ! அந்த ராமநாதனுக்கு எது பிடிக்கும், எது பிடிக்காது, எது வேண்டும், எது வேண்டாம் என்று அடிக்கொரு தடவை பிய்த்து எடுத்து விட்டாள் சாவித்திரி அம்மாள்!

இதை யெல்லாம் பார்த்துச் சந்திரிகாவுக்கு ஒரு பக்கம் சிரிப்பு வந்தது. என்றும் இந்த அம்மாளுக்குத் தன் தம்பியிடம் எத்தனை வாஞ்சை என்று மனத்துக்குள் அதிசயப்பட்டுக் கொண்டாள்.

"சந்திரிகா! உன்னிடம் ராமநாதனை 'பார்மலா'க 'இன்ட்ரட்யூஸ்' பண்ணவில்லை என்று நினைத்துக் கொண்டு பேசாமல் இருக்காதே. நீங்கள் இருவரும் ஏற்கனவே தெரிந்தவர்கள் ஆயிற்றே என்றுதான் பேசாமல் இருக்கிறேன். நீங்களானால் அதுதான் சாக்கு என்று ஒருவரோடு ஒருவர் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் இருக்கிறீர்களே!" என்று தனக்கு ஒரு 'டோஸ்' கொடுத்த போதுதான் சந்திரிகாவுக்கு எப்படியோ இருந்தது!

உண்மையில் சந்திரிகா அங்கே வந்திருந்ததைப் பார்த்ததும் ராமநாதன் ஆச்சரியப் பட்டு அல்லவா போயிருக்க வேண்டும்! ஆனால் அவன் முதலில் இவளைப் பார்த்ததும் சற்றும் ஆச்சரியப் பட்டதாகவே தெரியவில்லை. சிரித்துக் கொண்டே நமஸ்காரம் செய்து விட்டு உள்ளே போய் விட்டான்! சந்திரிகாவுக்கு இது எப்படியோ இருந்தது.

"சந்திரிகா! நீ இங்கே வந்திருப்பது தம்பிக்கு ஏற்கனவே தெரியும். ஒரு கடிதத்தில் குறிப்பாக எழுதியிருந்தேன்" என்று அன்று சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போதே சாவித்திரி அம்மாள் மெதுவாகச் சொன்னாள். அப்பொழுதுதான் சந்திரிகாவுக்குக் கொஞ்சம் வியப்பு நீங்கிற்று. ஆனாலும் ஒரு புதிய வியப்பு மனத்தில் ஏற்பட்டது.

'நாம் இங்கே வந்திருப்பதைப்பற்றிச் சாவித்திரி அம்மாள் ஏன் தன் தம்பிக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட வேண்டும்? அதற்கு என்ன அவசியம் வந்தது?'

இப்படி எண்ணிப் பார்த்தாள் சந்திரிகா. அவளுக்குப் பதில் தெரிய வில்லை.

ராமநாதனோ அடிக்கடி அக்காளிடம் ஏதோ பேசுவதும், அக்காள் ஏதோ பதில் சொல்வதுமாக இருவருக்கும் ஒரு பெரிய சர்ச்சை நடப்பது தெரிந்தது. சந்திரிகா மனத்துக்குள் இதைப் பற்றிப் பலவிதமாக எண்ண ஆரம்பித்தாள்.

அன்று மாலை ஐந்து மணி இருக்கும். திடீரென்று சாவித்திரி அம்மாள் ராமநாதனையும் சந்திரிகாவையும் கூப்பிட்டாள். "ஆமாம்! நீங்கள் இருவரும் 'மலபார் ஹில்ஸ்' பார்த்ததில்லையே? அப்படியே ஒரு 'ட்ரைவ்' போய்விட்டு வந்தால் என்ன?" என்று கேட்டாள் சாவித்திரி. சந்திரிகா திகைப்போடு பார்த்தாள்.

"நானே உங்கள் இருவரையும் அழைத்துச் சென்று காண்பிக்கிறேன். தம்பி கையில் காரைக் கொடுத்தால், மலபார் மலையில் எங்காவது பள்ளத்திலே கொண்டு இறக்கி விடுவான், இப்பொழுது அவன் இருக்கிற நிலையில்!" என்றாள் சாவித்திரி, சிரித்துக் கொண்டே. ராமநாதனும் சிரிக்க முயன்றான். சந்திரிகாவுக்கோ சிரிப்பு வரவில்லை. திகைப்புத்தான் அதிகரித்தது.

'இப்பொழுது அவன் இருக்கிற நிலையில்' என்றாளே, அது என்ன நிலை?—இவ்வாறு யோசித்தாள் சந்திரிகா.

சாவித்திரி அம்மாள் இதற்குமேல் அவர்களுடைய பதிலுக்குக் காத்திருப்பவளாகத் தோன்றவில்லை. நேரே விறு விறு என்று நடந்து போய்க் காரை எடுத்துக் கொண்டு வந்து முற்றத்திலே நிறுத்தி விட்டாள்.

சந்திரிகாவுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. என்றாலும் கடந்த இரண்டு மூன்று நாட்களாக அவளுடைய உள்ளத்தில் ஏற்பட்டிருந்த எண்ணங்கள், புதிய புதிய யோசனைகள் இத்தனையும் சேர்ந்து விவரிக்க முடியாத, இனம் தெரியாத, இது வரை தோன்றியிராத ஏதேதோ கற்பனைகளை யெல்லாம் மேலும் மேலும் எழுப்பின. அதே சமயம் சாவித்திரி அம்மாளுடைய அன்பு, அவளுக்குத் தன் தம்பியிடமிருந்த அளவு கடந்த பிரியம், அந்தப் பிரியம் எப்படி யெல்லாம் வெளிப்படுகிறது என்பது மிகத் தெளிவாகத் தெரியும்படி நடந்த காரியங்கள்—இத்தனையும் சேர்ந்து சந்திரிகாவின் மனத்தில் சாவித்திரி அம்மாளைப் பற்றிய மரியாதை உணர்ச்சியையே ஊர்ஜிதப்படுத்தின. இந்த உணர்ச்சிச் சுழலில் அவள் சிக்கித் தவித்துக் கொண்டிருந்த சமயத்தில், "என்ன சந்திரிகா, ரெடிதானே—புறப்படலாமா?" என்றாள் சாவித்திரி அம்மாள்.

மலபார் மலையை நோக்கிக் கார் புறப்பட்டது. முன் ஸீட்டில் சாவித்திரி அம்மாளுக்கு அருகில் சந்திரிகா உட்கார்ந்து கொண்டாள். ராமநாதன் பின் ஸீட்டில் உட்கார்ந்து கொண்டான்.



கண்ணுக்குக் குளுமையான கடல். பார்வை எட்டிய தூரம் வரை 'நேத்திரானந்தம்' என்று சொல்லுகிறார்களே, அப்படித் தோன்றுகிற ஜலப் பரப்பு. அங்கங்கே சிறுசிறு மரக்கலங்கள். தள்ளி அங்கங்கே பெரிய கப்பல்கள்—புகை விட்டுக் கொண்டே! மலபார் மலையை நோக்கி ஏறும் சரிவான பாதை. இரு மருங்கிலும் விதம் விதமான மரங்கள், செடிகள், கொடிகள் - இவற்றை யெல்லாம் கடந்து "தொங்கும் தோட்ட"த்துக்கு வந்தார்கள். அடடா! எத்தனை அருமையான தோட்டம் அது! இயற்கையைக் கூடச் செயற்கையாகச் சிருஷ்டிக்க முடியுமா!

"சந்திரிகா! இறந்த மனிதனுக்கு உயிர் கொடுக்க மட்டும் இன்னும் நாம் படிக்க வில்லை. மற்றப்படி மனிதனால் ஆகாதது ஒன்றும் இல்லை!" என்று தோட்டத்தின் அமைப்பை அதிசயித்துக் கொண்டே ஒரு மரத்தடியில் இருந்த பெஞ்சில் மூவருமாக உட்காருவதற்கு ஆயத்தம் செய்தான் சாவித்திரி.

அன்று மூவருமாக வெகுநேரம் அங்கே இருந்து பேசிக் கொண்டிருந்தார்கள். சந்திரிகாவுக்கு முதலில் எப்படியோ கூச்சமாக இருந்தது. பேச்சில் அதிகமாகக் கலந்து கொள்ள வில்லை. கொஞ்ச நேரம் ஆனதும் அவனும் மெதுவாகப் பேச்சில் தன்னையும் அறியாமல் கலந்து கொண்டான்.



மறு நாள் மாலை மறுபடியும் மலபார் மலைக்குப் புறப்பட்டார்கள் மூவரும். இன்று ராமநாதன் நேற்றைவிடக் கலகலப்பாக இருந்தான். சாவித்திரி அம்மாளே முழுதும் பேச வேண்டிய அவசியம் இல்லாமல் அங்கங்கே ராமநாதனும் பேச்சில் கலந்து கொண்டான். சந்திரிகாவுக்கு நேற்றளவு கூச்சம் இல்லை. முக்கிய காரணம் என்னவென்றால் நேற்றும் சரி, இன்றும் சரி, அவர்களுடைய பேச்சில் திருச்சியோ, திருடன் குறித்த சம்பவமோ—அயர்ந்து மறந்து கூட யாரும் குறிப்பிட வில்லை! ஆனால் மூன்றும் நாள்?...

மூன்றும் நாள் மாலை சாவித்திரி அம்மாள் கூப்பிடுவதற்கு முன்பே நான்கு மணிக்கே ராமநாதன் தயாராக இருந்தான். சந்திரிகாவுக்கும் இன்று மறுபடியும் சாவித்திரி அம்மாள் மலபார் மலைக்குக் கூப்பிடுவாளா என்று அப்பட்டமாக ஆசை ஏற்படாவிட்டாலும், கூப்பிட்டால் அதில் தவறு இல்லை, போகலாம் என்று இருந்தது.

சாவித்திரி அம்மாள் வழக்கம் போல் அன்றும் ஐந்து மணிக்கெல்லாம் மலபார் ஹில்லுக்கு இருவரையும் அழைத்தாள். அன்றும் மூவரும் அதே மரத்தடியில் அதே பெஞ்சில் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

நாலாம்நாள் வந்தது. இன்றும் சாவித்திரி அம்மாள் மலபார் ஹில்லுக்குக் கூப்பிடத்தான் செய்தாள். ஆனால் ஒரு சிறு சங்கடம் தனக்கு இருப்பதாகச் சொன்னாள்.

"உங்கள் இருவரையும் தோட்டத்தில் விட்டுவிட்டு, நான் கொஞ்சம் ஷாப்பிங் போக வேண்டும். ஷாப்பிங்கை முடித்து விட்டு வந்து உங்களோடு கலந்து கொள்கிறேன்!" என்றாள். "சரி" என்றான் ராமநாதன். சந்திரிகாவுக்குப் பதில் சொல்ல வார்த்தை வரவில்லை. அவளுடைய பதிலையும் யாரும் எதிர்பார்த்ததாகத் தெரியவில்லை. இந்த நிலைமையில் தன்னுடைய கௌரவத்தை விட்டுக் கொடுக்காத முறையில் சரி என்று வாயால் சொல்லாமல், தலையை அசைத்தாள் சந்திரிகா.

அன்றைக்குத்தான் இந்த நான்கு நாட்களிலும் முதன் முறையாகச் சந்திரிகா ராமநாதனைத் தனித்துப் பார்த்திருக்கிறாள். அன்றொரு இரவு திருச்சியில் திருடன் குதித்தோடிப் போனானே, அதன் பிறகு இன்றுதான் ராமநாதனை நேருக்கு நேராகத் தனிமையிலே பார்த்துப் பேசுகிறாள் சந்திரிகா. அது அவளுக்கு வாழ்க்கையிலேயே ஒரு புது அனுபவம். அவள் நினைத்துப் பார்க்காத, அவள் எண்ணியிருக்காத விதத்தில் பேச்சு தொடங்கிற்று. அப்பொழுது ஒரு விநாடி அவளுடைய உள்ளத்தில் ரவீந்திரனுடைய உருவம் வந்து நின்றது. ரவீந்திரனுடைய இலட்சியங்கள், அவன் தன்னைப்பற்றி எண்ணிய கனவுகள், அவனுடைய உள்ளத்தின் போராட்டங்கள், அவனுடைய எதிர்காலத் திட்டங்கள்—இத்தனையும் சந்திரிகாவின் உள்ளத்தில் ஒரு விநாடி குமைந்தன. "அவர் இப்பொழுது எப்படி இருக்கிறாரோ?" என்று ஒரு கணம் நினைத்தாள். அதே நேரத்தில் அவளோடு ராமநாதன் பேசிக் கொண்டிருந்தான். தப்பான மனிதன் இல்லை. பெருந்தன்மை நிரம்பியவன். கண்ணியமற்ற மனிதனில்லை. சீலம் நிறைந்தவன். பிறருடைய மன இயல்புகளை அறிய முடியாத பேதை இல்லை. நல்ல புத்திசாலி. அப்படிப்பட்டவனுடைய மனத்தில் என்ன எண்ணம் அரும்பியிருந்தது என்பது சந்திரிகாவுக்கு இப்பொழுது தெளிவாகத் தெரிந்தது.



சந்திரிகாவின் மனம் திருச்சிக்குச் சென்றது. ஆனால் ரவீந்திரன் திருச்சியிலா இருந்தான்! சந்திரிகா திருச்சியை விட்டுக் கிளம்பிய பிறகு எத்தனை சம்பவங்கள் நடந்து விட்டன! இவற்றையெல்லாம் சந்திரிகா எதிர்பார்த்தாளா? இல்லை. தன்னுடைய பிரிவு ரவீந்திரனுடைய உள்ளத்தில் சொல்லொணாத வேதனையைத் தரும் என்று அவள் அறிந்திருந்தாள் என்றாலும், தான் ரவீந்திரனுக்கு எழுதி வைத்த கடிதத்தை அவன் பார்த்தால், அந்த வேதனை தணிவதோடு உண்மையில் கல்யாணி அம்மாளிடம் இருந்த மனத் தடுமாற்றங் கூட மாறி விடும் என்றல்லவா அவள் எதிர்பார்த்தாள்! அவள் எதிர்பார்த்ததில் தான் என்ன பிசகு? பிசகில்லைதான்.

உண்மையில் அந்தக் கடிதம் ஆரம்பத்தில் அத்தனை பெரிய குழப்பத்தை உண்டாக்கியிருக்கக்கூடும் என்று அவள் எதிர்பார்ப்பதற்கு என்ன இடம் உண்டு? அந்தக் கடிதத்தைப் பார்த்த பிறகு டாக்டர் சுரேஷுக்குத்தான் எத்தனை திகைப்பு ஏற்பட்டது? அந்தக் கடிதத்துக்கும் ரவீந்திரனுடைய மனக் குழப்பத்துக்கும் என்ன காரணம் என்று டாக்டர்தான் எத்தனை தூரம் மண்டையைக் குழப்பிக் கொண்டார்! பிறகு கல்யாணி அம்மாளிடம் அல்லவா அந்த விஷயத்தைக் கேட்டுத் தெளிவு படுத்திக் கொண்டார் அவர்!

ஆமாம்; கல்யாணி அம்மாளுடைய வேதனையைப் பற்றிச் சில விவரங்கள் கேள்விப்பட்டதாக இலஞ்சிச் சாமியாரிடம் டாக்டர் சுரேஷ் கூறினார் அல்லவா? அது உண்மையான வார்த்தை. இந்த விவரத்தை அவருக்குத் தெரிவித்தவர் வேறு யாருமில்லை. கல்யாணியின் தகப்பனார் கனகசுந்தரந்தான்.

லால்குடிக்குத் தம்முடைய மகள் கல்யாணியை அழைத்துப் போனதிலிருந்து, அவள் படும் வேதனையைக் காணச் சகியாத கனகசுந்தரம் ஒரு நாள் டாக்டர் சுரேஷ் சொக்கி குடிக்குப் போகிறார் என்று தெரிந்து திருச்சிக்கே புறப்பட்டு வந்தார். டாக்டர் சுரேஷைப் பார்த்தார்.

"டாக்டர் ஸார்! என்னுடைய மகன் படும் வேதனையைக் காணுவதை விட நான் இந்த உலகத்தை விட்டே மறைந்து விடலாம். என்ன செய்வது? அன்றைக்கே அவன் இந்த விவரத்தைச் சொல்லி யிருந்தால் நீங்கள் ஏதாவது யோசனை சொல்லி யிருப்பீர்கள். இந்தக் கடிதத்தை நீங்கள் கொஞ்சம் பாருங்கள். இது அந்தப் பெண் சந்திரிகா எழுதிய கடிதமாம். இதை எழுதி வைத்து விட்டுத்தான் அந்தப் பெண் மறைந்திருக்கிறாள். இதைப் பார்த்ததும் அவனுடைய மனத்தில் ஏற்பட்ட உணர்ச்சியை அனுவசியமான சந்தேகச் சிக்கலினால் கல்யாணி குழப்பி யடித்திருக்கிறாள். நீங்கள் இதைக் கொஞ்சம் பாருங்கள்!" என்று கனகசுந்தரம் அந்தக் கடிதத்தை டாக்டர் சுரேஷிடம் கொடுத்தார். அதைப் படித்ததும் டாக்டருக்கும் குழப்பம் அதிகரிக்கத்தான் செய்தது. "இந்தக் கடிதத்தினால் உண்மையில் ரவீந்திரனுக்கு மன மாற்றம் அல்லவா ஏற்பட்டிருக்கவேண்டும்! ஏன் அதிர்ச்சி உண்டாயிற்று? பெரிய புதிராக இருக்கிறதே இது!" என்று நினைத்தார் டாக்டர்.

"நீங்கள் லால்குடிக்கு ஒரு முறை வந்து போக வேண்டும் என்று நினைக்கிறேன் டாக்டர். என் மகனுடைய மனமும் ஒரே குழப்பத்திலும் வேதனையிலும் இருக்கிறது. நீங்கள் வந்து விசாரித்து இதற்கு ஒரு வழிசெய்தால் என் வீட்டிலே விளக்கை ஏற்றி வைத்த புண்ணியம் உங்களுக்கு உண்டு டாக்டர்—"



"பண்ணையார்வாள்! நீங்கள் இந்த மாதிரி எல்லாம் பேசக்கூடாது. உண்மையில் என்னுடைய கடமையை நான் செய்கிறேன். அவ்வளவுதான். இந்தக் கடிதத்தைப் பார்த்தபிறகு கல்யாணி அம்மாளும் ரவீந்திரனோடு ஒன்றாக இருப்பதால் தவறில்லை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. அப்படி ஒன்றும் கல்யாணி அம்மாளைப் பார்த்து அதிர்ச்சி உண்டாகி விடும் என்று எனக்குத் தோன்றவில்லை இப்பொழுது. இது விஷயத்தை இந்தக்கடிதம் மிகத் தெளிவாக விளக்குகிறது. ஆனால் ஏன் இப்படி ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது என்ற விஷயந்தான் இப்பொழுது எனக்குப் புரியவில்லை. நான் ஏற்கனவே செய்து வைத்திருந்த முடிவு சரியில்லை என்று இந்தக் கடிதம் இப்பொழுது நன்றாக நிரூபிக்கிறது!"

டாக்டர் இந்த விதமாகக் குழப்பத்தோடு பேசினார். கனகசுந்தரத்துக்கு மிகவும் கவலையாக இருந்தது.

"பண்ணையார்வாள்! நீங்கள் மனத்திடத்தை இழக்கக் கூடாது. தைரியமாக இருங்கள். எது எப்படியானாலும், அதிர்ச்சிக்கு என்ன காரணம் இருந்தாலும் சர்ப்பகந்தியினால் ரத்த அமுக்கம் குணமாகும். சந்தேகம் இல்லை. ரவீந்திரனுடைய மனநிலை செம்மையாவதற்கு ஒலிச் சிகிச்சை என்று ஒன்று யோசித்திருக்கிறேன். ஆகையினால் கவலைப் படாமல் நீங்கள் லால்குடிக்குப் போங்கள். நான் வேறு காரியமாகச் சோக்கி குடிக்குப் போகிறேன். எல்லாம் விவரமாகப் பார்த்து இலஞ்சிச் சாமியாரோடு கலந்து பேசி ஒரு முடிவோடு திரும்புவேன். திரும்பியதும் உங்களையும் கல்யாணி அம்மாளையும் சோக்கி குடிக்கே அழைத்துப் போக முயற்சிக்கிறேன். எனக்கு ஒரு வாரம் சாவகாசம் கொடுங்கள்!" என்று சொன்னார் சுரேஷ்.

இதன் பிறகுதான் டாக்டர் சுரேஷ் சோக்கி குடிக்குப் புறப்பட்டார். புறப்படுவதற்கு முன்பு பதட்டப்படாமல் அப்புலிங்கத்தைப் போய்ச் சந்தித்துப் பேசினார். ரவீந்திரன் இருந்த வீட்டுக்குள்ளே சென்று ஏதேதோ ஆராய்ச்சிகள் நடத்தினார். மாடிப் படிகளை வெகு பலமாக ஆராய்ந்தார். பிறகு ரவீந்திரன் எழுதுவதற்கு உபயோகித்து வந்த மேஜையை யெல்லாம் ஆராய்ந்தார். வேறு கடிதங்கள் ஏதாவது அங்கு இருக்குமா என்று பார்த்தார். இதெல்லாம் ஒரு நாள் கழிந்து விட்டது. எனவேதான் சோக்கி குடிக்கு அவர் வந்து சேர்வதிலும் அன்று அத்தனை தாமதம் ஏற்பட்டது.

எத்தனை தாமதம் ஆனாலும், கூத்துக்கு மத்தியில் டாக்டர் வந்து சேர்ந்ததில் இலஞ்சிச் சாமியாருக்கு அளவில்லாத சந்தோஷம். டாக்டர் தம்மைத் தனியாக அழைத்துப் போய் மரத்தடியிலே நிறுத்திப் பேச ஆரம்பித்ததுமே, சாமியாருக்கு ஒரே ஆனந்தம் உண்டாகி விட்டது. கடிதத்தைப் பற்றிய விவரத்தை டாக்டர் சொல்லி, கல்யாணி அம்மாளை அங்கே அழைத்து வந்து ஒரு மாதம் மலைக் காட்டிலே ரவீந்திரனோடு இருப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டியதுதான் என்று டாக்டர் கூறி முடித்ததும், இலஞ்சிச்

சாமியார் மிக்க உணர்ச்சியோடு ஒரு குழந்தையைப் போலக் கேட்டார் :

"அப்படியானால் அந்தச் சந்திரிகாவை யும்கூட இங்கே அழைத்து வந்து விடு வீர்கள் போலிருக்கிறதே !"

"சாமிகளே ! கமன ஓடியை விட்டு விட்டதாக அல்லவா நினைத்தேன் ! பழக்கம் போக வில்லையா இன்னும் ! சந்திரிகாவை இங்கே அழைத்து வருவதாவது ! ஹூம் ! அவன் உயிரோடு இருக்கிறுனோ? அல்லது காவேரியில் கரைந்து விட்டானோ? யார் கண்டார்கள் ? அப்படியே உயிரோடுதான் இருந்தான் என்ருலும் இங்கே வந்தால் இனி என்ன ஆகும்? மீண்டும் குழப்பமா !"

"டாக்டர் ஸார் ! இந்தக் கடிதந்தான் நிலைமையைத் தெளிவுபடுத்தி விட்டதே ! இனி என்ன உண்டு குழப்பம் ?"

"சாமிகளே ! எனக்கு இன்னும் அத்தனை தெளிவு உண்டாகிவிட வில்லை. மழையிலே நிற்பவனுக்கு ஒரு குடை — அதிலும் பெண்கள் பிடித்திருப்பார்களே, இன்னக் குடை — அது கிடைத்தால் எப்படி யிருக் குமோ அப்படி யிருக்கிறது இந்தக் கடிதம். அந்த மட்டும் பெரிய உதவிதான். ஆனல் குடை கிடைத்ததே தவிர மழை நின்று விட்டது என்று அர்த்தமா ! வாருங்கள். கூட்டத்தில் ரவீந்திரனைத் தனியாக விட்டு வந்திருக்கிருேம். என்ன ஆயிற்று என்று பார்ப்போம் !"

டாக்டர் சுரேஷும் இலஞ்சிச் சாமி யாரும் ரவீந்திரனிடம் உள்ள அளவு கடந்த பிரியத்தினுல் கூத்து நடக்கும் இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

இதை யெல்லாம், பாவம், சந்திரிகா கண்டாளா ? தன்னுடைய கடிதம் எல்லா விஷயங்களையும் தெளிவுபடுத்தியிருக்கும் என்றுதான் நம்பினுள். ஆனலும் சொல்லா மல் கொள்ளாமல் புறப்பட்டு வந்தது எத்தனை பெரிய தவறு என்று ஒரு நினைப்பு மனத்தில் ! 'சொல்லியிருந்தால் தான் அந்த வீட்டை விட்டுக் கிளம்பி யிருக்க முடியுமா ! என்ன பைத்தியக்கார நினைப்பு !' என்று மறுவினடி அவளே எண்ணிக் கொண்டாள்.

இத்தனை எண்ணங்களும் ஒரு விநாடிக் குள்ளே ! வெளியுலகத்துக்குத்தானே வினுடி என்றும் நிமிஷம் என்றும் மணி என்றும் பாகுபாடு ! மன உலகில் எத்தனை வருஷத்துச் சம்பவங்கள் ஒன்று சேர்ந்து ஒரு கணத்துக்குள் ஓடி விடுகின்றன ! அப்படித் தான் சந்திரிகாவின் மனத்துக்குள் அத்தனை நிகழ்ச்சிகளும் ஒரு விநாடிக்குள்ளே ஓடின !

"சந்திரிகா ! நீ என்ன அப்பொழுதே பிடித்து அந்த வாடாமல்லிகைச் செடி யையே பார்த்துக் கொண்டு ஏதேதோ யோசனை செய்கிருய்?" என்று கேட்டான் ராமநாதன். சந்திரிகா திகைத்துப் போய்ப் பார்த்தாள்.

"நான் அதைப் பார்க்கவே இல்லையே !"

"பார்த்தாயா ! எதிரே இருக்கிற அந்தச் செடிகூட உன் கண்ணுக்குத் தெரியாத விதத்தில் அத்தனை பலமாக ஏதோயோசனை செய்கிருய். அப்படித் தானே ?" என்று கேட்டான் ராமநாதன் மீண்டும்.

"ஒன்றுமில்லை. மன்னிக்க வேண்டும் !" என்ருள் சந்திரிகா.

"இதில் மன்னிப்பதற்கு என்ன இருக் கிறது? ஒன்றுமில்லை. எதற் கெடுத்தாலும் "எக்ஸ்க்யூஸ் மீ" "ஐ ஆம் ஸாரி" என்று அர்த்தமில்லாமல் மன்னிக்கச் சொல்வதும், அர்த்தமில்லாமல் வருத்தப்படுவதும் இங் கிலீஷ்காரர்களுடைய வழக்கம் அல்லவா ? நீ எங்கே இதைப் படித்தாய்? அக்காளோடு இரண்டு மூன்று வாரம் பழகிக் கொஞ்சம் ஆங்கில வாடை அடிக்கிறது ! அவ்வளவு தான். மற்றப்படி நீ முழுக்க முழுக்கத் தமிழ்ப் பண்பாட்டிலே பிறந்து வளர்ந்த வள் ஆயிற்றே. சம்பிரதாயத்துக்குச் செய் கிற ஸாரி, தாங்ஸ், போன்ற வாய்ச் சடங்குகளை யெல்லாம் கடந்த நாகரிகம் அல்லவா உன்னுடைய நாகரிகம். எனக்குத் தான் தெரியுமே !" என்ருன் ராமநாதன்.

"அப்படி யென்ருல் ?"

"உன்னை அன்று ஒரு நாள் இரவு ஆபத் தான வேளையில் பார்த்ததோடு சரி என்று நினைக்கிருயா ? இல்லை. பின்பொரு நாள் தில்லிக்குப் போவதற்காக நான் உங்க ளிடம் எல்லாம் சொல்லிக் கொள்ள வந்த போது நீ வந்து நின்ருயே ? அதோடு சரி என்று நினைக்கிருயா ? அதுவும் இல்லை. உண்மையில் உன்னைப் பற்றிப் பரிபூரண மாக எனக்குத் தெரியும். உண்மையில் என்னைப் போல் உன்னைத் தெரிந்து கொண்டவன் வேறு யாரும் இருக்க முடியாது. சொல்லப்போனுல் ரவீந்திரனுக் குக் கூட உன் இதயப் பாங்குமட்டும்தான் தெரியும். எனக்கோ உன்னுடைய, உனக்கே தெரியாத, வரலாறு கூட ஓரளவு தெரியும் என்று நினைக்கிறேன். டாக்டர் சுரேஷுக்கு அடுத்தபடி அந்த விவரங்கள் அனைத்தும் அறிந்தவன் நான்தான் !"

இப்படி ராமநாதன் சொன்னதும் சந்திரி காவுக்குத் தலை சுற்றியது. ஒரே குழப்பத் தோடு பார்த்தாள்.

"சந்திரிகா ! உன்னுடைய பெயருக்குச் சாதாரணமாகச் சந்திரன் என்று அர்த்தம். ஆனல் வடநாட்டு வைத்தியர்களின் பாஷை யில் சந்திரிகா என்ருல் சர்ப்பகந்திக்கு இன்னொரு பெயர். அது தெரியுமா உனக்கு? அந்தப் பெயர் உனக்கு எப்படி வந்தது என்று ஆராய்ந்ததன் பலனுகத் தான் யாருக்குமே தெரியாத விவரங்கள் எல்லாம் டாக்டர் சுரேஷுக்கும் எனக்கும் தெரிய வந்தன" என்ருன் ராமநாதன்.

சந்திரிகாவுக்கு என்ன பேசுவது என்று தெரியவில்லை. மருண்டு மருண்டு ராமநாத னையே பார்த்தாள் அவள். (தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon